தமிழ்ப் பதிப்பக வெளியீடு க.

விளம்பி நாகனார்
இயற்றிய

# நான்மணிக் கடிகை

பதிப்பாசிரியர் :
ராவ்சாஹிப்
ச. வையாபுரிப் பிள்ளை

சக்தி காரியாலயம்
சென்னை : : மதுரை

# பதிப்புரை

இதுவரை ஏட்டுச் சுவடிகளிலிருந்து வெளிவராத நூல்களையும், திருந்திய முறையில் அச்சிடப்படாத நூல்களையும், முன் அச்சிட்டும் தற்போது பிரதிகள் கிடைக்காத நூல்களையும் வெளியிடத் தமிழ்ப்பதிப்பகம் முயற்சிசெய்கிறது. ஆராய்ச்சியாளர்கள் பொதுமக்கள் மாணவர்கள் முதலிய அனைவர்க்கும் பயன்படும் முறையில் இப்பதிப்புக்கள் வெளியிடப்படுகின்றன. முதலில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை வெளியிடத் தீர்மானித்திருக்கிறோம். அவற்றில் முதலில் வெளிவருவது நான்மணிக்கடிகை.

இப்பதிப்பைச் சிறந்த முறையில் பலவகை அகராதி, குறிப்புக்கள் முதலியவற்றுடன் எல்லோருக்கும் பயன்படும்படி சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் ராவ் சாஹெப் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் பதிப்பித்து உதவியுள்ளார்கள். பல்கலைக் கழகத்து மாணவர் திரு. மு. சண்முகம் பிள்ளை இம்முயற்சியில் பெரிதும் உழைத்துள்ளார்கள். இந்நூலை சக்தி காரியாலயத்தார் அழகுற அச்சியற்றி வெளியிட்டுத் தந்துள்ளார்கள். இவர்கள் யாவர்க்கும் எங்களது நன்றி உரியதாகுக.

**மயிலாப்பூர்**
***7—2—44***

**கா. இராமநாதன் செட்டியார்**
**தி. கி. நாராயணசாமி நாயுடு**
காரியதரிசிகள், தமிழ்ப்பதிப்பகம்.

# உள்ளுறை

# முன்னுரை

நமது மாணவச் சிறுவர்கள் இளமையில் ஓதிவரும் நூல்களில் ஒன்று நான்மணிக்கடிகை. ஆனால் ஒழுக்க நெறியைப்பற்றிக் கூறுவதால், இந்நூல் அவர்களுக்கு மட்டும் உரியதென்று கொள்ளக்கூடாது. சிறுவர் பெரியோர் என்ற வேறுபாடின்றி அனைவரும் இதனைக் கற்றுப் பயன்பெறுதற்கு உரியர்.

இது 'கடைச் சங்கம் மரீஇய நூல்களுள் ஒன்று' என்று சொல்லுவர். சங்க நூல்களை இந்நூல் எடுத்தாளு கிறது.

> தாயுடன்று அலைக்குங் காலையும் வாய்விட்டு
> அன்னாய் என்னும் குழவி (குறுந் - 397)

என்பது

> குழவி அலைப்பினும் அன்னே என்று ஓடும் (25)

என்பதன் மூலமாகும். வள்ளுவர் திருக்குறளை ஒரு சில இடங்களில் பின்பற்றுகிறது. உதாரணமாக

> இன்மையின் இன்னாதது இல்லை இலம் என்னும்
> வன்மையின் வன்பாட்டது இல் (31)

என்ற செய்யுள்

> இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
> இன்மையே இன்னா தது (1041)

என்ற திருக்குறளையும்

> இன்மை யிடும்பை இரந்துதீர் வாமென்னும்
> வன்மையின் வன்பாட்டது இல் (1063)

என்ற திருக்குறளையும் உட்கொண்டது.

> யாதொன்றும் பேணாமை பேதை தொழில் (குறள் - 833)

என்ற திருக்குறள்

> பேணாமை செய்வது பேதைமை (24)

என்பதற்கு ஆகரம்.

> வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
> கோனோக்கி வாழும் குடி (குறள் - 542)

என்பது

> கோனோக்கி வாழுங் குடி (28)

என்று தொடங்குஞ் செய்யுட்கு ஆதாரம்.

ஆகவே இந்நூல் சங்க நூல்களுக்கும் திருக்குறளுக்கும் பிற்பட்டதென்பது நிச்சயம். சேனாபதி (54), காங்கி (61), அசனம் (81), ஆசாரம் (95) முதலிய வடசொற்களும், நாக்கு (77) முதலிய சொல் வடிவங்களும், சோவின் அருமை என்ற இடத்துப்போல ஆறும் வேற்றுமையில் வரும் 'இன்' உருபும், வீழ்வானேல் (74) என்பதிற்போல 'ஏல்' என்னும் எச்ச ஈறும் இந்நூல் பிற்காலத்ததென்பதை உணர்த்துகின்றன. 'ஊஞ்சாமை' (27) முதலிய இடங்களிற்போல, எதிர்மறைத் தொழிற் பெயர் எதிர்மறை யேவற்பொருளில் வரும் வழக்கும் இத்துணிபினையே வற்புறுத்துகிறது. எனினும் சிலப்பதிகாரத்திலே (வழக்குரை காதை, இறுதி வெண்பா)

> அல்லவை செய்வார்க்கு அறம்கூற்ற மாமென்னும்
> பல்லவையோர் சொல்லும் பழுதன்றே

என இந்நூற் செய்யுள் (84) எடுத்தாளப்பட்டிருக்கிறது. இதனால் இந்நூல் அக்காப்பியத்திற்கு முற்பட்டதென்பது விளங்கும். இது தோன்றிச் சுமார் 1300-ஆண்டுகள் ஆயிருக்கலாம்.

நான்மணிக்கடிகையை இயற்றிய ஆசிரியர் பெயர் விளம்பி நாகனார் என்பது. இது சங்க காலப் புலவர்களுடைய பெயர் வரிசையிற் காணாதது கவனித்தற்குரியது. திருவள்ளுவமாலைப் புலவர்களின் பெயர் வரிசையிலும் இது காணப்படவில்லை.

இந்நூலில் வரும் பொருளமைதியும் கருத்துக்கள் எடுத்துள்ள சொல்வடிவும் மிகவும் சிறந்தனவாயுள்ளன. ஒவ்வொரு தொடரும் மாசு நீக்கி நன்ருக இழைக்கப் பெற்ற மணிபோல விளங்குகிறது. இதுபற்றியே நான் மணிக்கடிகை என இந்நூல் பெயரிடப்பட்டுள்ளது. கடிகை என்பதற்குத் துண்டம் என்பது பொருள். ஒவ்வொரு செய்யுளிலும் நந்நான்கு அழகிய கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. திருக்குறள், திரிகடுகம், நாலடி, நான் மணிக்கடிகை இந்நான்கும் மிகச் சிறந்து விளங்கும் அரிய தமிழ்க் கருவூலமாகும்.

இந்த அரிய நூல் முதன்முதல் சுமார் 100-ஆண்டு களுக்கு முன்பு வெளியிடப்பட்டது. பின் பலரும் வெளியிட்டிருக்கிருர்கள். பதிப்புக்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஏடுகளைப் பரிசோதித்து வெளியிட்ட பதிப்பு ஒரு வகை. முன் பதிப்புக்களை மாத்திரம் நோக்கி அப்படியே வெளியிட்டது பிறிதொரு வகை. இவற்றுள், இரண்டாவது வகையைக் குறித்து யாதும் சொல்லவேண்டியதில்லை முதலாவது வகைதான் கவனித்தற்குரியது. இவ்வகையில் ஸேது ஸம்ஸ்தான மஹா வித்வான் ஸ்ரீ ரா. இராகவையங்கார் அவர்கள் செந்தமிழ்ப் பிரசுரமாக மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து வெளியிட்ட பதிப்பே மிகச் சிறந்து விளங்குகிறது. அவர்களுக்கும் அவர்களைப்போன்று பதிப்பு முயற்சியில் தலைப்பட்டுள்ள அனைவர்க்கும் நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிருேம்.

இவ்வகைப் பதிப்புக்களிலும் திருந்தவேண்டிய இடங்கள் சிலவுள்ளன. அவற்றுள் ஒன்று காட்ட விரும்புகிறேன்.

ஒன்றாக்கல் பெண்டிர் தொழில்நலம் என்றும்
நன்றாக்கல் அந்தணருள்ளம் பிறன் ஆளும்
நாடுக்கல் மன்னர் தொழில்நலம் கேடுக்கல்
கேளிர் ஒரீஇ விடல் (86)

என்று ஒரு சிறந்த பதிப்பிலே பாடம் காணப்படுகிறது. இங்கே 'நன்றூக்கல்' என்பதில் எதுகை நயம் இருக்கிறது. ஆனல், முந்நியசீர் மாச்சீராக இருத்தலால் வெண்பாவிற்குரிய தளை தட்டிவிடுகிறது. எனவே இது பிழை என்பதில் சிறிதும் ஐயமில்லை. பழைய உரை எப்பொழுதும் மூலத்திலுள்ள சொற்களைக் கிடக்கை முறையிலே விளக்கிச் செல்வது. இச் செய்யுளின் உரையில் 'நன்றூக்கல்' என்பது 'அறத்தினையே முயன்றொழுகுதல்' என விளக்கப்படுகிறது. 'நன்று' என்பது 'நன்மை' எனப் பொருளாகுமே அன்றி 'அறம்' எனப் பொருள்படாது. ஆகவே பழைய உரையும் இப் பாடம் பிழையெனக் காட்டுகின்றது. கடைசியாக, இச் செய்யுளில் முதலடியும் மூன்றும் அடியும் 'ஒன்று......என்றும்,' 'நாடூக்கல்......கேடூக்கல்' என ஒரூஉத் தொடையாக அமைந்திருத்தலால், இரண்டாம் அடியும் அவ்வாறு அமையவேண்டுமெனக் கருதலாம். இக் காரணங்களால 'அறனூக்கல்' என்பது பாடமாயிருக்கவேண்டும் என ஊகிக்கலாம். இப் பாடத்தில் தளை தட்டவில்லை; பழைய உரையும் பொருத்தமுடையதாகிறது. ஒரூஉத் தொடையும் நன்கு அமைந்து செய்யுளின் இனிமை மிகுகின்றது. இவ்வூகத்திற்கேற்ப, ஏட்டுப் பிரதிகளிலும் இப் பாடமே காணப்படுகிறது. 1901-ல் வெளிவந்த தமிழ்ச் செல்வப் பதிப்பிலும் இந்தப் பாடமே கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 'அறனூக்கல்' என்பதே உண்மைப் பாடம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒரு சில தவிர மற்றையவெல்லாம் நன்கு பரிசோதித்துப் பதிப்பிக்க வேண்டும் நிலைமையில்தான் இருக்கின்றன. இதற்கு வேண்டும் முயற்சியை நாம் மேற்கொள்ளுதல்வேண்டும்.

நான்மணிக்கடிகை முதலிய நீதி நூல்கள் மிகப் பரவுவதற்குக் காரணமா யிருந்தன கிறிஸ்தவ சங்கங்களும்,

அரசாங்க ஸ்தாபனங்களும், சென்னைப் பல்கலைக் கழகமுமாகும். அவற்றைப் பாலர்க்குரிய நூல்களாகக் கிறிஸ்தவ சங்கத்தார் பதிப்பித்துப் பரப்பினர்; கல்வியிலாகாப் பதிப்பாக வெளியிடுவித்து அரசாங்கத்தார் பரவச்செய்தனர். பல்கலைக் கழகமும் மெட்ரிக்குலேஷன் முதலிய பரீக்ஷைகளுக்குரிய பாடப் புஸ்தகத்தில் நீதிநூற் செய்யுட்களைச் சேர்த்துப் பதிப்பித்துப் பரப்பிவந்தனர்; இப்பொழுதும் பரப்பிவருகின்றனர். ஆனால், பெரும் பான்மைப் பதிப்புக்களில், திருந்தாத பாடங்களே காணப்படுகின்றன. எனவே சுத்தமான பதிப்புக்கள் வெளிவரவேண்டுவது அவசியம். இப்போது கிடைக்கும் ஏட்டுப் பிரதிகள் தாமும் அழிந்துவிடுவதற்குமுன், இம்முயற்சியில் நாம் ஈடுபடவேண்டும்.

இந்நூலினைப் பதிப்பிடுதலில் ஒரு சில நியமங்களைக் கையாண்டுள்ளேன். இவற்றைக் குறித்துச் சில ஆண்டுகளாக நான் கருத்தூன்றி ஆலோசனை செய்ததுண்டு. புது நியமங்களுக்கு அவசியம் உண்டா? என்ற ஐயப்பாடும் இடையிடையே தோன்றியது. ஆங்கிலத்தில் 'சாஸர்' இயற்றிய கவிகளைத் தற்காலத்துள்ளார் பொருளுணர்ந்து கொள்வதற்கு அருமையாயிருத்தல்பற்றி, சொல்லின் எழுத்தமைதியை (Spelling) மாற்றி அச்சியற்றல் தகுமா? இதுபோன்றதுதானே செய்யுளில் சொற்களைப் பிரித்து அச்சிடுதல்? இங்ஙனம் பிரிப்பதால் செய்யுளின் ஓசை கெட்டுவிடுமல்லவா? இவை போன்ற கேள்விகளுக்கு முற்றும் திருப்திகரமான விடையளிப்பது எளிதல்ல. ஆனால், பொருள் எளிதில் விளங்கும்படி அச்சியற்ற வேண்டும் என்ற நோக்கமும் கைக்கொள்ளவேண்டுவதாயுள்ளதே. இரு வகை மனப்பாங்கிற்கும் ஒரு சமரசம் ஏற்படவேண்டியது அவசியம். இந் நெறியில் நான் சிறிது முயற்சி செய்திருக்கிறேன். அனுபவம் பெருகப் பெருக இந் நியமங்கள் திருந்தியமையலாம். செய்யுள்

பயிலுவோரின் தொகை அதிகரித்துவரும் இந் நாளில் இந் நியமங்கள் தக்கபடி ஆராயப்பட்டு அனைவர்க்கும் உடம்பாடான சில நியமங்கள் ஏற்படக்கூடும். அக்காலம் விரைவின்வரின் நலமாகும்.

பொதுவாக நான் செய்துள்ள ஒரு சில வேறுபாடுகளைக் குறித்து மட்டுந்தான் இங்கே சொல்ல விரும்புகிறேன்.

1. செய்யுட்களில் காமா, செமிக்கோலன் முதலிய குறியீடுகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதனால் வாசிப்பவர்களுக்கு எளிதில் பொருள் விளங்கும்.

2. நேரிசை வெண்பாக்களில் தனிச் சொல்லை இரண்டாவது அடியில் சிறியதொரு கோடு அமைத்துத் தனிப்படக் காட்டுவது இப்போது வழக்கமாயுள்ளது. இவ் வழக்கம் சமீப காலத்திலேதான் ஏற்பட்டது. முற்காலத்து ஏட்டுப் பிரதிகளில் இது கிடையாது. முதன் முதலில் அச்சிடும் முயற்சியில் இறங்கியவர்களில் சிலர் சிறிது வெற்றிடம் விட்டும், சிலர் இடம்விடாது தொடர்ந்தும் தனிச் சொல்லைப் பதிப்பித்தனர். வேறு சிலர் தனிச் சொற்களுக்குமுன் கலி வெண்பாவில் உடுக்குறியிட்டுப் பதிப்பித்தனர். உதாரணமாக 1831-ல் தாண்டவராய முதலியாரால் 'பழுதற ஆராயப்பட்டு' வெளிவந்த 'திருக்குறண்மூலமும் நாலடி நானூற்றின் மூலமும்' என்ற பதிப்பைக் காண்க. 1868-ல் வெளியிட்ட வடமலை வெண்பாவும் இங்ஙனமே பதிப்பிக்கப்பட்டுள்ளது. மிகப் பிற்பட்ட காலத்தில்தான் (சுமார் 1875) கோடிட்டுக் காட்டும் வழக்கம் ஏற்பட்டது. தனிச் சொல்லை விதித்துள்ள இலக்கண நூல்களில் அதனை இவ்வாறு காட்ட வேண்டும் என்ற குறிப்புக் கொடுக்கப்படவில்லை. கலிப்பா முதலியவற்றுள் தனிச் சொல் வரும்போது அதனைக் கோடிட்டுக் காட்டும் வழக்கம் இன்றும் கிடையாது.

நேரிசைவெண்பாவிலும் கலிவெண்பாவிலும் மட்டுந்தான் இதனை இப்போது கையாண்டு வருகிறார்கள். நேரிசை வெண்பாவில் சில இடங்களில் கோடிடுவது பொருளை எளி தில் உணர்தற்காக இடும் காமா முதலிய குறியீடுகளுக்குத் தடையாயிருக்கிறது. ஆகவே, இப் பதிப்பில் தனிச் சொல்லுக்கு அடையாளமாக இடும் கோடு நீக்கப்பட் டுள்ளது.

3. சொற்களை அசையுறுப்புக் கெடாதவண்ணமும் எதுகை, மோனை, சீர் இவற்றின் நயங்கள் கெடாதவண்ண மும் பிரித்திருக்கிறது.

4. கீழ் வருவனவற்றைப் பிரிக்கவில்லை:—

மரபுவழிப்பட்ட அடைமொழிகள் (உ-ம்) கொடுங் குழை, வாண்முகம்.

சிறுமை, பெருமை, நல், தீ முதலிய அடைமொழிகள் (உ-ம்) பெருங்கடல், பெருஞ்சிறப்பு.

ஒரு சொல் நீர்மைத்தாக அமைந்த சொற்கள் (உ-ம்) வேளாண்மை, மேற்பட, இன்புறாஉம்.

எல்லாம் என்பது சேர்ந்து வரும் பெயர்கள் (உ-ம்) மரமெல்லாம்.

ஆ, ஆக, ஆகிய முதலிய சேர்ந்து வரும் பெயர்ச் சொற்கள் (உ-ம்) வித்தாக.

வேற்றுமையுருபுகள், சாரியை, சொல்லுருபுகள் சேர்ந்துவரும் பெயர்கள் (உ-ம்) படியை, மடியகத்து.

உருபுகள் தொக்குவரும் பெயர்கள் (உ-ம்) அறஞ் சேர்ந்த, காதற்புதல்வர், எள்ளற்பொருளது.

பண்பு குறிக்கும் குறிப்புச் சொற்கள் (உ-ம்) மெல் லென்றல்.

கொள் முதலிய துணைவினைகள் சேர்ந்து வரும் வினைகள் (உ-ம்) பூசிக்கொளினும், தளிர்க்குமாம்.

செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

எச்சத்தின்மேல் வரும் அன்ன, அனைய முதலியன (உ-ம்) கற்றன்னர்.

எச்சவாய்பாடுகள் (உ-ம்) சிறிதாயின்.

மேலே குறிக்கப்பட்டனவொழியப் பிற இடங்கள் பெரும்பாலும் பிரிக்கப்பட்டிருக்கும். இப்பதிப்பிலே, வேறு இரண்டு நியமங்கள் முக்கியமாகக் கவனிக்கத்தக்கன. குற்றுகர முற்றுகரங்களும் இன்மைப் பொருளில் வரும் இல்லும் எல்லா இடங்களிலும் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

இப் பதிப்புத் திருந்துவதற்குப் பயன்பட்ட ஏட்டுச் சுவடிகளும் முன் பதிப்பு விவரங்களும் இம் முன்னுரையின் பின்பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. புஷ்பரதச் செட்டியார் பதிப்பில் காப்பு (உள்பட) 106 செய்யுட்கள் உள்ளன. இவற்றுள் 'வைததனைருகும்' (103), 'ஒருவன் அறிவானும்' (101), 'இன்சொலானுகும்' (106) என்ற மூன்று செயயுட்களும் சிறுபஞ்ச மூலத்தைச் சார்ந்தன. அந் நூலில் பழைய உரையோடு இவைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் நான்மணிக்கடிகையில் இவை வரற்பாலனவல்ல; ஏட்டுப் பிரதிகளிலும் இவை காணப் படவில்லை. ரிப்பன் பிரஸ் பதிப்பிலும் முறையே 101, 102, 104 - என்ற எண்ணுடையனவாக இச் செய்யுட்கள் காணப்படுகின்றன. 'மதிமன்னு' 'படியை மடியகத்து' என்ற இரண்டையும் கடவுள் வாழ்த்தாகக்கொண்டு 104 செய்யுட்கள் நூலின்கண் உளவாக இப்பதிப்புக் காட்டுகின்றது. 'அலைப்பான் பிறிதுயிரை' என்ற செய்யுளும், 'மனைக்கு விளக்கம்' என்ற செய்யுளும் ஒரு சில

ஏட்டுப் பிரதிகளில் காணப்படுதல்பற்றி ஈண்டு வெளியிடும் பதிப்பில் இறுதியில் சேர்த்துள்ளேன். குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள் வெளியிட்ட யாழ்ப்பாணப் பதிப்பில் 3 செய்யுட்கள் காணப்படவில்லை. அவையாவன: 'கல்லிற் பிறக்கும்' (7), 'நகையினிது' (38), 'யானையுடையார்' (55) என்பன. 32-வது செய்யுளின் (புகைவித்தாப்) பின் ஒரு புதுச் செய்யுள் கொடுக்கப்பட்டுள்ளது. அச் செய்யுள் வருமாறு :

முனியார் அரிய முயல்வார் ; அவரின்
முனியார் அறங்கா முறுவார் ; இனிய
இரங்கார் இசைவேண்டும் ஆடவர் ; அன்பிற்கு
உயங்கார் அறிவுடை யார்.

இவ் வெளியீட்டில் 67, 68 என்ற எண்ணுள்ள செய்யுட்களும் முன்பின்னாக மாறியுள்ளன.

இந் நூலையும் கீழ்க்கணக்கு நூல்களையும் பதிப்பிடுவதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் அனுமதி அளித்துள்ளார்கள். பல்கலைக் கழகத்து மாணவர் வித்வான் திரு. மு. சண்முகம் பிள்ளை இப் பதிப்பு முயற்சியில் பெரிதும் உதவினர். தமிழ்ப் பதிப்பகத்தார் கீழ்க்கணக்கு நூல்களைத் தங்கள் பதிப்பாக வெளியிட இசைந்துள்ளார்கள். சக்தி காரியாலயத்தார் இந் நூல்களை அச்சியற்ற மனமுவந்து இசைந்து அழகாக இந் நூலை வெளியிட்டுள்ளார்கள். இவர்கள் அனைவர்க்கும் எனது நன்றி உரியது.

சென்னை
7-2-44

எஸ். வையாபுரிப் பிள்ளை

# ஒப்பு நோக்கிய அச்சுப் புஸ்தகங்கள்

| | மூலம் (அல்லது) உரை | பதிப்பித்தவர் | ஆண்டு | பதிப்பு விவரம் |
|---|---|---|---|---|
| 1 | புத்துரை | தி. க. சுப்பராயச் செட்டியார் | 1872 | ——— |
| 2 | ,, | வே. இராஜகோபாலப் பிள்ளை | ,, | ஊ. புஷ்பரதச் செட்டியார் |
| 3 | மூலம் | அ. குமாரஸ்வாமிப் பிள்ளை | 1900 சார்வரிஹூ ஆனிமீ | யாழ்ப்பாணம், வித்தியாநுபாலன யந்திர சாலை |
| 4 | ,, | தி.ச. ஆறுமுக நயினார், திரிசிரபுரம் | 1901 பிலவஹூ | தமிழ்ச் செல்வம்: நீதி நூற்றிரட்டு (இரண்டாவது பிரிவு எண் 2) |
| 5 | பழைய உரை | ரா. இராகவையங்கார் | 1903 | செந்தமிழ்ப் பிரசுரம் |
| 6 | மூலம் | T. A. ராஜரத்னம் பிள்ளை | 1908 | பன்மணிக் கொத்து (இரண்டாம் பாகம்) |
| 7 | ,, | பு. சிதம்பர புன்னைவனநாத முதலியார் | 1919 | செய்யுட் பாடக் கோவை (முதற் பாகம்) |
| 8 | பழைய உரை | வே. இராஜகோபாலையங்கார் | 1924 | சென்னை, மயிலாப்பூர் கம்பர் விலாஸம் |
| 9 | புத்துரை | கா. ர. கோவிந்தராஜ முதலியார் | 1925 | மதராஸ் ரிப்பன் அச்சு யந்திரசாலை |
| 10 | மூலம் | . | 1933 | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், திருநெல்வேலி. |

# ஒப்பு நோக்கிய ஏட்டுப் பிரதிகள்

| | பிரதி செய்த காலம் இடம் முதலியன | உரியவர் |
|---|---|---|
| 1 | பரிதாபி வருஷம் சித்திரை மாசம் 3-ம் தேதி மங்களவாரம் பகல் 20 நாழிகைக்குக் குட்டந்தீர்த்த துறையில் திரு இராஜசேகரன் ஏடு எழுதி முடிந்தது. | திரு. தி. த. கனகசுந்தரம் பிள்ளை |
| 2 | ஆழ்வார் திரு நகரி | மதுரைத் தமிழ்ச் சங்க நூல் நிலையம் |

## விளம்பிநாகனார்

இயற்றிய

# நான்மணிக்கடிகை



### கடவுள்வாழ்த்து

மதிமன்னு மாயவன் வாண்முகம் ஒக்கும் ;
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும் ;
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றுஅவன் கண்ஒக்கும் ; பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம்.

**இதன் பொருள் :** மதியை மாயவனது ஒளிமுகம் ஒக்கும்; ஒளிசிறந்த ஞாயிற்றை அவனது சக்கரம் ஒக்கும்; முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்கண் செவ்விமலரை மற்று அவன் கண் ஒக்கும்; நிறம் காயாவினது புதுமலரை ஒக்கும் **என்றவாறு.** க

படியை மடியகத்து இட்டான் ; அடியினன்
முக்கால் கடந்தான் முழுநிலம் ; அக்காலத்து
ஆனிரை தாங்கிய குன்றுளடுத்தான் ; சோவின்
அருமை அழித்த மகன்.

உலகத்தைத் தன் வயிற்றின்கண் வைத்தானும், எல்லா உலகையும் தன் சேவடியான் மும்முறையாற் கடந்தானும், முற்காலத்து ஆனிரையைத் துயர்கெடுக்கவேண்டி மலையை எடுத்தானும், சோஎன்னும் குறும்பின் அருமையை அழித்த மகனும் முன் சொல்லிய மாயவன். உ

இவை இரண்டும் வாழ்த்து.

*1.* 18 எய்கரும் **2.** 1 படையை (ரி) ; 9 ஆநிரை, ஆப்பனித ; 12 கோவின

## நூல்

எள்ளற்க என்றும் எளியர்என்று ; என்பெறினும்
கொள்ளற்க கொள்ளார்கை மேற்பட ; உள்சுடினும்
சீறற்க சிற்றிற் பிறந்தாரை ; கூறற்க
கூறல் லவற்றை விரைந்து.

எளியர் என்று ஒருவரையும் என்றும் இகழாதொழிக ; எல்லாம்பெறினும் தான் சென்று கொள்ளத்தகாதார் கை மேற்படக் கொள்ளாதொழிக ; சிற்றிற் பிறந்தார் செய்த பிழை தன் உள்ளத்தைச் சுடுகின்றதாயினும் அவரை வெகுளாதொழிக ; தனக்குத் தகுதியில்லாத சொற்களை ஆராயாது விரைந்து கூறுதொழிக.

கொள்ளார் என்றது பகைவர் என்றுமாம். ௩

பறைபட வாழா அசுணமா ; உள்ளம்
குறைபட வாழார் உரவோர் ; நிறைவனத்து
நெல்பட்ட கண்ணே வெதிர்சாம் ; தனக்கு ஒவ்வாச்
சொல்பட்டால் சாவதாம் சால்பு.

பறை ஒலித்தால் உயிர்வாழா அசுணமா ; மனம் குறைவுபட உயிர் வாழார் அறிவுடையார் ; மிக்க காட்டின்கண் உள்ள மூங்கில்கள் நெற்பட்டபொழுதே சாம் ; அவைபோல, ஒருவன் தனக்குத்தகாத பழிச்சொற்கள் படவரின், சாவது சால்பாவது. ௪

மண்ணி அறிப மணிநலம் ; பண்அமைத்து
ஏறிய பின்அறிப மாநலம் ; மாசுஅறச்
சுட்டுஅறிப பொன்னின் நலங்காண்பார் ; கெட்டுஅறிப
கேளிரான் ஆய பயன்.

மணியினது நன்மையைக் கழுவி அறிவர் ; பண்ணினை அமைத்து ஏறியபின்னர் அறிவர் மாவினது நன்மையை ; குற்றம் அறும்படிச் சுட்டு அறிவர் பொன்னின் நன்மையைக் காண்பார் ; அவைபோலத் தாங்கள் கெட்டால் அறிவர் கேளிரான் ஆய பயன்.

**3.** 3 இளையாரென்று ; 7 மேலவர, மேலவா, மேலாக **4.** 7 பெரியோர்(ரி) ; 8 நிறையகதது ; 12 தனககொலலாச் ; 13 - 14 சொற்பட்வாழாதாம்(ரி) ; 14 சாவது, சாவர்தஞ் ; 15 சார்பு **5.** 5 - 7 ஏறியறிபபின் மாநலம ; 5 - 6 ஏறி அறிபவே ; 11 நலங்காண்பான ; 13 கேளிரால்

கள்ளி வயிற்றுஇன் அகில்பிறக்கும்; மான்வயிற்று
ஒள்அரி தாரம் பிறக்கும்; பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும்; அறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி?

கள்ளியின் வயிற்று இன்அகில் தோன்றும்; மானின் வயிற்று ஒள்ளிய அரிதாரம் தோன்றும்; பெருங்கடலுள் பல பொருள்களையும் விலையாகப் பெறும் முத்தங்கள் தோன்றும்; அவைபோல, அறிவார் யார் நல்லறிவினை உடையானொருமகன் பிறக்குங் குடியினை? ௬

கல்லில் பிறக்கும் கதிர்மணி; காதலி
சொல்லில் பிறக்கும் உயர்மதம்; மெல்லென்
அருளில் பிறக்கும் அறநெறி; எல்லாம்
பொருளில் பிறந்து விடும்.

மலையின்கண் பிறக்கும் ஒளியையுடைய மணி; மகளிரது மெல்லிய சொல்லின்கண் பிறக்கும் தன் மனத்திற்களிப்பு; மெல்லென்ற அருளின்கண் பிறக்கும் நல்ல அறநெறிகள்; அவ் அற முதலாயின எல்லாம் பொருளின்கண் பிறக்கும். ௭

திருஒக்கும் தீதுஇல் ஒழுக்கம்; பெரிய
அறன்ஒக்கும் ஆற்றின் ஒழுகல்; பிறனைக்
கொலைஒக்கும் கொண்டுகண் மாறல்; புலைஒக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு.

தான் பிறந்த குலத்திற்குத் தீது வாராமல் ஒழுகும் ஒழுக்கம் செல்வத்தோடு ஒக்கும்; மிக்க அறஞ்செய்கையோடு ஒக்கும் நெறியின்கண் நின்று ஒழுகும் ஒழுக்கம்; பிறனொருவனைத் தனக்கு நட்பாகக்கொண்டுவைத்துப் பின்பு அவன்மாட்டுக் கண்மாறுதல் அவனைக் கொன்றதனோடு ஒக்கும்; தன்னை விரும்பாதார் மாட்டு அவரால் ஒரு பயன்கருதிச் சேறல் புலைமையோடு ஒக்கும். ௮

6. 4 மான்வயிறறின; 5 ஒளளிய; 13 நலலர் 7. 7 உயிர்மதம், உயாமுதம; 8 மெல்லெனறு 8. 14 முன்னைச்

**கள்வம்என் பார்க்கும் துயில்இல்லை ; காதலிமாட்டு**
**உள்ளம்வைப் பார்க்கும் துயில்இல்லை ; ஒண்பொருள்**
**செய்வம்என் பார்க்கும் துயில்இல்லை ; அப்பொருள்**
**காப்பார்க்கும் இல்லைத் துயில்.**

களவுகாணுதும் என்று சோர்வுபார்ப்பார்க்கும்துயில் இல்லை; தம்மால் காதலிக்கப்பட்டாளொருத்தி மாட்டுத் தம் உள்ளம் வைப் பார்க்கும் அவளைக் கூடுமட்டும் துயில்இல்லை ; ஒள்ளிய பொருளைத் தேடுவமென்பார்க்கும் அப்பொருள் கூடுமளவும் துயில் இல்லை ; அத் தேடிய பொருளைப் பிறர் கொள்ளாமற் காப்பார்க்கும் துயில் இல்லை. ௯

**கற்றார்முன் தோன்றா கழிவிரக்கம் ; காதலித்துஒன்று**
**உற்றார்முன் தோன்றா உறாமுதல் ; தெற்றென**
**அல்ல புரிந்தார்க்கு அறம்தோன்றா ; எல்லாம்**
**வெகுண்டார்முன் தோன்றா கெடும்.**

கற்றார்மாட்டுக் கழிந்த பொருட்கு இரக்கம் தோன்றா ; அன்பு பட்ட பொருளைப் பெறுவதற்கு முயல்வார் மாட்டு அவ் அன்பு பட்டன தமக்கு எய்தாமைக் காரணம் தோன்றா ; தெளியப் பாவமுள்ளவாம் தீவினைகளைப் பயின்று பழகிவந்தார்க்கு அறவினை தோன்றா ; வெகுண்டார்க்கு எல்லா நன்மைகளும் தோன்றா.

உறாமுதல் என்பதனை 'உறுமது' என்றும் 'உசாவுதல்' என்றும் உராவுதல் என்றும் பாடம் ஓதுவாரும்உளர். ௧௦

**நிலத்துக்கு அணிஎன்ப நெல்லும் கரும்பும் ;**
**குளத்துக்கு அணிஎன்ப தாமரை ; பெண்மை**
**நலத்துக்கு அணிஎன்ப நாணம் ; தனக்குஅணி**
**தான்செல் உலகத்து அறம்.**

**9.** 1 கள்வேம் ; 5 - 6 உள்ளம்வைத தார்கரும் ; 9 செய்வேமென், செய்வாமென், சோப்பாமென் **10.** 7 உறாஉமது, உராவுதல், உசாவுதல் ; 9 அல்லல **11.** 1 நிலத்திற்கு ; 2 அணியென்பர் ; 5 குளத்திற்கு ; 6 அணி யெனபர்; 8 ப்பன்மை, மேன்மை ; 9 நலத்திற்கு ; 12 - 15 தனககணிதான செலஞுரு லகத்ததாம்(ரி)

நிலத்துக்கு அழகுஎன்று சொல்லுவர் நெல்லையும் கரும்பையும்; குளத்துக்கு அழகுஎன்று சொல்லுவர் தாமரைப் பூவை; அவைபோல, பெண்டிரழகிற்கு அழகுஆவது நாணுடைமை; ஒருவன்தனக்கு அழகுஆவது தான்செல்லும் உலகிற்குத் துணையாகச்செய்யப்பட்ட அறம். கக

**கந்தில் பிணிப்பர் களிற்றை; கதம்தவிர**
**மந்திரத்தி னால்பிணிப்பர் மாநாகம்; கொந்தி**
**இரும்பில் பிணிப்பர் கயத்தை;சான் றோரை**
**நயத்தில் பிணித்து விடல்.**

தறியினில் பிணிப்படுப்பர் யானையை; சினந்தணியும் வகை மறை மொழியில் பிணிப்படுப்பர் மாநாகத்தை; அவை போல, கழுறித் தளை முதலாயினவற்றால் பிணிப்படுப்பர் கீழ்மக்களை; நயத்தால் பிணிப்படுக்க சான்றோரை. கஉ

**கன்றாமை வேண்டும் கடிய; பிறர்செய்த**
**நன்றியை நன்றாக் கொளல்வேண்டும்; என்றும்**
**விடல்வேண்டும் தன்கண் வெகுளி; அடல்வேண்டும்**
**ஆக்கஞ் சிதைக்கும் வினை.**

பிறர் அஞ்சத்தக்கவற்றின்கண் தழும்பாதொழிய வேண்டும்; தனக்குப் பிறர்செய்த நன்றியை மிக மனத்தின்கண் கொள்ள வேண்டும்; எஞ்ஞான்றும் தன்மாட்டு வெகுளியை நீக்க வேண்டும்; தன் செல்வத்தைக் கேடு செய்யுஞ் செய்கையைக் கெடுக்க வேண்டும். கங

**பல்லினான் நோய்செய்யும் பாம்பெல்லாம்; கொல்களிறு**
**கோட்டான்நோய் செய்யும் குறித்தாரை; ஊடி**
**முகத்தான்நோய் செய்வர் மகளிர்; முனிவர்**
**தவத்தில் தருக்குவர் நோய்.**

***12.*** 4 கதந்தவிர, சினந்தவிர; *12* நண்மை ***13.*** 6 நன்றாகக், கொல்லாக(ரி) ***14.*** 4 கொல்லேறு; 11 மகளிர்; 13 தவத்தால்; 14 தருகுவர்; 12-15 முனியா தவத்திற் றருக்குவானோய்

பல்லானே பிறரைத் துன்பஞ் செய்யும் பாம்பெல்லாம்; கொல்களிறு தான் கொலே குறித்தாரைக் கோட்டானே துன்பஞ் செய்யும்; மகளிர் தம் காதலரைப் புலந்து முகத்தானே துன்பம் செய்வர்; அவைபோல, அருந்தவரும் தமது தவத்தானே தம்மை இகழ்ந்தார்க்குத் துன்பத்தை மிகுவிப்பர். ௧௫

**பறைநன்று பண்அமையா யாழின்; நிறைநின்ற**
**பெண்நன்று பீடுஇலா மாந்தரின்; பண்அழிந்து**
**ஆர்தலின் நன்று பசித்தல்; பசைந்தாரின்**
**தீர்தலின் தீப்புகுதல் நன்று.**

வீக்குதல் அமையாத யாழோசையின், பறையோசை நன்று; பெருமையில்லாத ஆடவரின், நிறையுடைமையினின்ற பெண்ணே நன்று; ஒழுக்கம் அழிந்து உண்டலின், பசித்தலே நன்று; அன்புபட்டாரின் நீங்குதலின், தீயின்கண் புகுதலே நன்று.

**வளப்பாத்தி யுள்வளரும் வண்மை; கிளைக்குழாம்**
**இன்சொற் குழியுள் இனிதுஎழூஉம்; வன்சொல்**
**கரவுஎழூஉம் கண்இல் குழியுள்; இரவுஎழூஉம்**
**இன்மைக் குழியுள் விரைந்து.**

செல்வப்பாத்தியுள்ளே தோன்றி வளரும் ஈகை; இன்சொற் பாத்தியுள்ளே இடையூறின்றியே தோன்றிவளரும் தன் சுற்றக்குழாம்; கண்ணோட்டம் இல்லாத பாத்தியுள் கடுஞ் சொல்லும் கரத்தலும் தோன்றி வளரும்; வறுமைப் பாத்தியுள் தோன்றி வளரும் இரப்பு. ௧௬

**இன்னாமை வேண்டின் இரவுஎழுக; இந்நிலத்து**
**மன்னுதல் வேண்டின் இசைநடுக; தன்னோடு**
**செல்வது வேண்டின் அறஞ்செய்க; வெல்வது**
**வேண்டின் வெகுளி விடல்.**

**16.** 4 கிளைகருழாஅம; 6 குழியின், குழியில்; 7 இனிதெழும்; 8 வன் சொலாம்(ரி); 11 குழியின; 12 இரவெழும், இழிவெழூஉம; 14 குழியின், குழியில **17.** 1 இன்னுத; 3 இரவொழுக; 4 இந்நிலத்தில்; 8 தம்மொடு

ஒருவன் தனக்குப் பொல்லாப்பு வேண்டின் இரப்பினைத் தொடங்குக; இவ்வுலகின்கண் என்றும் உளனாகை வேண்டின் புகழை நிறுத்துக; தன்னொடு மறுமைக்குத் துணையாகச் செல்வதனை வேண்டின் அறத்தைச் செய்க; தான் வென்றியை வேண்டின் வெகுளியைத் தவிர்க. கஎ

கடற்குட்டம் போழ்வர் கலவர்; படைக்குட்டம்
பாய்மா உடையான் உடைக்கிற்கும்; தோம்இல்
தவக்குட்டம் தன்னுடையான் நீந்தும்; அவைக்குட்டம்
கற்றான் கடந்து விடும்.

கடலின் ஆழத்தை ஊடறுத்துச் செல்வர் நாவாயினையுடையார்; சேனையின் அருமையை வென்றுசெல்லும் பாய்மாவினை யுடையவன்; குற்றமில்லாத தவத்தின் அருமையைத் தன் மனத்தினைத் தனக்கெனவுடையான் நீந்திக் கடக்கும்; அவையினது அருமையைக் கற்றுவல்லவன் வென்றுவிடும். கஅ

பொய்த்தல் இறுவாய நட்புக்கள்; மெய்த்தாக
மூத்தல் இறுவாய்த்து இளநலம்; தூக்குஇல்
மிகுதி இறுவாய செல்வங்கள்; தத்தம்
தகுதி இறுவாய்த்து உயிர்.

வஞ்சித்தலை ஈறாகவுடையவா யிருக்கும் நட்புக்கள்; மெய்ம்மையாக மூத்தலை இறுவாயாக வுடையது இளமை நலம்; ஆராய்தலையில்லாத செருக்கினை இறுவாயாகவுடையவா யிருக்கும் செல்வங்கள்; தத்தமுடைய ஒழுக்கங்களை இறுவாயாக வுடையது உயிர்வாழ்வு. கக

மனைக்குஆக்கம் மாண்ட மகளிர்; ஒருவன்
வினைக்குஆக்கம் செவ்வியன் ஆதல்; சினச்செவ்வேல்
நாட்டுஆக்கம் நல்லன்இவ் வேந்துஎன்றல்; கேட்டுஆக்கம்
கேளிர் ஒரீஇ விடல்.

**19.** 3 நட்புகள்; 7 இளைநலம்(ரி) **20.** 10 நல்லானிவ், நல்லணி

ஒருவனது மனைக்குச் செல்வமாவது மாட்சிமையுடைய மகளிர் உளராதல்; ஒருவனது காரியத்துக்கு ஆக்கமாவது செப்பம் உடையவனாதல்; நாட்டுக்கு ஆக்கமாவது அந்நாட்டை ஆளுஞ் சினச்செவ்வேலையுடைய வேந்தன் நல்லனென்று பிறரால் சொல்லப்படுதல்; ஒருவன் கேட்டுக்கு ஆக்கமாவது தன் சுற்றத் தாரை மேவாது நீங்கி விடுதல். உ௦

**பெற்றான் அதிர்ப்பின் பிணையன்னாள் தான்அதிர்க்கும் ;**
**கற்றான் அதிர்ப்பின் பொருள்அதிர்க்கும் ; பற்றிய**
**மண்அதிர்ப்பின் மன்னவன் கோல்அதிர்க்கும்; பண்அதிர்ப்பின்**
**பாடல் அதிர்ந்து விடும்.**

தன்கொழுநன் ஒழுக்கத்திற் கலங்கினானாயின், அவன் மனை யாளும் அவன் வழியினளாகலான், அவளும் கலங்கும்; கற்றான் கலங்குமாயின், அவன் கற்ற நூலும் கலங்கும்; தன்னான் ஆளப் படுகின்ற நாடு நெறிநில்லாது கலங்குமாயின், அரசன் செங்கோ லும் கலங்கும்; யாழின்கண் வீக்குக் கலங்குமாயின், பாடலும் கலங்கும். உக

**மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை;தான் செல்லும்**
**திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை ; இருந்த**
**அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை ; தனக்குப்பாழ்**
**கற்றறிவு இல்லா உடம்பு.**

தன்மனைக்குப் பாழாவது மனையாளை இல்லாமை; தான் செல்லக்கடவ திசைக்குப் பாழாவது தன்னொடு நட்புடையாரை இல்லாமை; தான்இருந்த அவைக்குப் பாழாவது [1]அறிவான் முதிர்ந்தாரை இல்லாமை; தனக்குப் பாழாவது கற்றுணர் வில்லாத உடம்பு. உஉ

**மொய்சிதைக்கும் ஒற்றுமை இன்மை ; ஒருவனைப்**
**பொய்சிதைக்கும் பொன்போலும் மேனியை ; பெய்த**
**கலம்சிதைக்கும் பாலின் சுவையை ; குலஞ்சிதைக்கும்**
**கூடார்கண் கூடி விடின்.**

**21.** 8 பாரிய(ரி); 9 மன்னதிர்ப்பின **22.** 4 சென்ற; 6 நட்டாரை
**23.** 13 கூடார்கள். 1 உணர்வான்

பெருமையை அழிக்கும் ஒற்றுமையின்மை ; ஒருவனைத் தன் பொன்போலு மேனியைத் தான் உரைக்கும் பொய் கெடுக்கும் ; பாலினது சுவையைப் பால்பெய்த பொல்லாக் கலம் கெடுக்கும் ; தான்பிறந்த குலத்தைக் கெடுக்கும் தனக்கு இனமல்லாதாரை இனமாகக் கூடின். உ௩

**புகழ்செய்யும் பொய்யா விளக்கம் ; இகழ்ந்துஒருவன்**
**பேணுமை செய்வது பேதைமை ; காணுக்**
**குருடராச் செய்வது மம்மர் ; இருள்தீர்ந்த**
**கண்ணராச் செய்வது கற்பு.**

ஒருவன் பொய்சொல்லாமை என்னும் விளக்கம் அவற்குப் புகழை விளைக்கும் ; யாதனையும் இகழ்ந்து யாதுகாவாமையைச் செய்வது ஒருவனது அறிவின்மை ; யாதொன்றனையும் உண்மை காணுக் குருடராய்ச் செய்வது கல்லாமை ; மயக்கந் தீர்ந்த கண்ணுடையராகச் செய்வது கல்வி. உ௪

**மலைப்பினும் வாரணம் தாங்கும் ; குழவி**
**அலைப்பினும் அன்னேஎன்று ஓடும் ; சிலைப்பினும்**
**நட்டார் நடுங்கும் வினைசெய்யார் ; ஒட்டார்**
**உடனுறையுங் காலமும் இல்.**

மேல் வலிதாகிய பகை வந்து தன்னை அலைப்பினும் யானை போரைத் தாங்கும் ; குழவியைத் தாய் அலைப்பினும் அக்குழவி அன்னேஎன்று அவள் பின்னே செல்லும் ; நட்டாரோடு நட்டார் வெகுண்டு வினைசெய்வாராயினும் அவர் நடுங்கும் வினைசெய்யார் ; பொருந்தாதார் ஒருவகையாற் பொருந்தினராயினும் மனத்தால் பொருந்தி உடன்உறையுங் காலமும் இல்லை.

மேற்கொண்டவன் மலைப்பினும் என்றுமாம். உ௫

**24.** 4 இகலதொருவர்ப்(பி) ; 9 குருடனுச்(பி) ; 12 மருள்தீர்ந்த
**25.** 4-7 அலைப்பினு மனனேயென் றேடுமகுழவி(பி) ; 5 உலைப்பினும் ;
6 அன்னை யென்று ; 7 ஓதும் ; 13 உடனுறங்கும்

**நகைநலம் நட்டார்கண் நந்தும்; சிறந்த**
**அவைநலம் அன்பின் விளங்கும்; விசைமாண்ட**
**தேர்நலம் பாகனால் பாடுஎய்தும்; ஊர்நலம்**
**உள்ளானால் உள்ளப் படும்.**

நகையினது நன்மை நட்டார்மாட்டுச் சிறக்கும்; அவையினது நன்மை மாறுபாடின்றி அன்புடைத்தாமாயின் விளங்கும்; விசைமாட்சிமைப்பட்ட தேரினதுநலம் ஊரும்பாகனால் பெருமை எய்தும்; ஊரினது நலம் அவ்வூர்க்கு முதன்மை யுடையவன் நன்மையானே நினைக்கப்படும். ௨௬

**அஞ்சாமை அஞ்சுக; ஒன்றின் தனக்குஒத்த**
**எஞ்சாமை எஞ்சும் அளவெல்லாம்; நெஞ்சுஅறியக்**
**கோடாமை கோடி பொருள்பெறினும்; நாடாமை**
**நட்டார்கண் விட்ட வினை.**

பழி முதலாயினவற்றை அஞ்சாமையை அஞ்சுக; பொருந்துமாயின் தனக்குத் தகுதியாகிய ஒழுக்கங்களைத் தான் [1]நிற்குமளவும் தவிராதொழிக; தன்மனம் அறியக் கோடாதொழிக, கோடி பொருள்பெற்றாயினும்; ஆராயாதொழிக, தனக்கு நட்டாராயினார்மாட்டுத் தான் செய்யவிட்ட காரியத்தை. ௨௭

அல்லதூஉம், நட்டாரோடுகூடிச் செய்யாத வினையை நாடாதொழிக என்றுமாம்.

**கோல்நோக்கி வாழும் குடியெல்லாம்; தாய்முலையின்**
**பால்நோக்கி வாழும் குழவிகள்; வானத்**
**துளிநோக்கி வாழும் உலகம்; உலகின்**
**விளிநோக்கி இன்புறூஉம் கூற்று.**

அரசன் செங்கோல் நோக்கி வாழும் உலகத்துக் குடிகளெல்லாம்; பெற்ற தாயினது முலைப்பாலை நோக்கி வாழும் குழவிக

**26.** 1 நகைநலம்(ரி); 5 அவைநலன; 9 தேர்நலன; 12 ஊாநலன்; 13 உள்ளானை, உள்ளாரால **27.** 2 அஞசுதி(ரி); 2 - 3 அஞசுவதொனறிற; 4 தனகோத; 6 எஞசல(ரி); 8 நெஞசததுக; 10 கோடிப; 12 நாடாதி(ரி); 13 நாட்டாாகண் **28.** 4 தாய்முலைப(ரி); 12 உலக(ரி). 1 இறகு.

ளெல்லாம்; வானத்தின்கணுள்ள துளியினை நோக்கி வாழும் உலகமெல்லாம்; அவ்வுலகின் சாக்காட்டினை நோக்கி இன் புறூஉம் கூற்றம். உ௮

கற்பக் கழிமடம் அஃகும்; மடம்அஃகப்
புற்கம்தீர்ந்து இவ்வுலகில் கோள்உணரும்; கோள்உண [ர்ந்தால்
தத்துவம் ஆன நெறிபடரும்; அந்நெறியே
இப்பால் உலகத்து இசைநிறீஇ. உப்பால்
உயர்ந்த உலகம் புகும்.

ஒருவன் கற்கவே மிக்க பேதைமை குறையும்; பேதைமை குறையப் புல்லறிவுதீர்ந்து இவ்வுலகத்துள்ள இயற்கையை அறியும்; அவ்வியற்கையை அறிந்தால் மெய்ம்மையாகிய வீட்டுநெறியின்கண் செல்லும்; அச்செல்லப்படுகின்ற நெறியானே இவ்வுலகின்கண் புகழைநிறுத்தி உப்பக்கத்து உயர்ந்த வீட்டுலகம் புகும்.

குழித்துழி நிற்பது நீர்; தன்னைப் பல்லோர்
பழித்துழி நிற்பது பாவம்; அழித்துச்
செறுவுழி நிற்பது காமம்; தனக்குஒன்று
உறுவுழி நிற்பது அறிவு.

குழித்த நிலத்துள்ளே நிற்பது நீர்க்கு இயற்கையாவது; பல்லோரும் பழிக்கப்பட்டவன்மாட்டே பாவம் நிற்பது; தனக்கு நண்பாயினார் [1]அழித்துத்தடுக்கவும் தான் சென்றுழிச் செல்வது காமமாவது; தனக்கு ஒரு துன்பம் வந்துற்றால் அவ்விடத்தே வந்து உதவிநிற்பது அறிவு. ௩௰

திருவின் திறலுடையது இல்லை ஒருவற்கு;
கற்றலின் வாய்த்த பிறஇல்லை; எற்றுள்ளும்
இன்மையின் இன்னாதது இல்லை; இலம்என்னும்
வன்மையின் வன்பாட்டது இல்.

**29.** 1 கறகக்; 4 அதுவஃக, மடமஃஇற; 5 புறபந்திர்நது, குறறந்திாந்து; 6 இவ்வுலகினை(ரி); 8 கோளுணர்ந்தான(ரி); 12 அநநெறி **30.** 3-4 நீரகந் தனனைப; 9 செறிவுழி(ரி) **31.** 2 திறனுடையது; 11 - 12 இல்லையில லெனறுத(ரி); 12 இலனென்னும; 14 வனபாடது(ரி). 1 கழித்துத

செல்வம்போல ஒருவற்கு வலியுடையது பிறிது இல்லை ; கல்வி போலப் பயன்படுவன பிற இல்லை ; யாதனுள்ளும் [1] இன்மை போல இன்னாதது ஒன்று இல்லை ; யாதொரு பொருளும் இலம் என்று பிறரை இரக்கும் வன்மைபோல வலியதிறன் இல்லை.

அல்லதூஉம், இரந்துசென்றார்க்கு யாதும் இலம்என்று மறுக்கும் வன்மைபோல வலியதிறமில்லை என்றுமாம். ௩௧

புகைவித்தாப் பொங்குஅழல் தோன்றும் ; சிறந்த
நகைவித்தாத் தோன்றும் உவகை ; பகைஒருவன்
முன்னம்வித் தாக முளைக்கும் ; முளைத்தபின்
இன்னாவித் தாகி விடும்.

புகை காரணமாக, ஓங்குநெருப்பு உண்டென்று அறியலாம் ; ஒருவன்மாட்டுஉள்ள முறுவல் காரணமாக, அவன் மனத்துள்ள [2]உவகை தோன்றும் ; ஒருவன் செய்த இன்னாக் குறிப்புச் செய்கைகளான், அவன் மனத்துள்ள பகைமை வெளிப்படும் ; அப் பகைமை பின்பு விளைவயின் இன்னாமைகளுக்குக் காரணமாகத் தோன்றும். ௩௨

பிணிஅன்னர் பின்நோக்காப் பெண்டிர் ; உலகிற்கு
அணிஅன்னர் அன்புடைய மக்கள் ; பிணிபயிலும்
புல்அன்னர் புல்லறிவின் ஆடவர் ; கல்அன்னர்
வல்லென்ற நெஞ்சத் தவர்.

ஒருவர்க்கு உற்றநோயோடு ஒப்பர் பின்புவரும் பழியை ஆராயாது செய்யும் மகளிர் ; உலகத்திற்கு அலங்காரத்தை ஒப்பர் எல்லா உயிர்க்கும் அன்புடைய மக்கள் ; பிறர்க்குப் பிணியை வருவிக்கும் நச்சுப்புல்லோடு ஒப்பர் புல்லிய அறிவினையுடைய ஆடவர் ; கல்லோடு ஒப்பர் வலிய நெஞ்சத்தை யுடையார். ௩௩

**32.** 1 புகைவித்தாற், புகைவித்தாய்ப் ; 5 நகைவித்தாற், நகைவித்தாய்த ; 10 தாகி **33.** 6 அன்புடை ; 7 மாககள ; 8 பிணிபேணும், பிணிப்பினும், பிணிபயிரின(ரி). 1 வறுமைபோல. 2 அன்புடைமை.

அந்தணரின் நல்ல பிறப்புஇல்லை ; என்செயினும்
தாயின் சிறந்த தமர்இல்லை ; யாதும்
வளமையோடு ஒக்கும் வனப்புஇல்லை ; எண்ணின்
இளமையோடு ஒப்பதூஉம் இல்.

மறையவர் பிறப்புப்போல மிக்க பிறப்பு இல்லை; எல்லா நன்மையுஞ் செய்தாராயினும் தாயைப்போல மிக்க தமர் இல்லை; செல்வத்தோடு ஒக்கும் அழகு மற்று யாதும் இல்லை; ஆராயின், இளமைக் காலம்போல எல்லா நன்மையும் முடிக்கலாவது பிறிதொன்றும் இல்லை. ௩௪

இரும்பின் இரும்புஇடை போழ்ப ; பெருஞ்சிறப்பின்
நீர்உண்டார் நீரான்வாய் பூசுப ; தேரின்
அரிய அரியவற்றால் கொள்ப ; பெரிய
பெரியரான் எய்தப் படும்.

இரும்பால் செய்த கருவிகளானே இரும்பினை இடையே போழ்வர்; பெருஞ்சிறப்பினையுடைய நீரினையுண்டார் நீரானே அந்நீரினையுண்ட வாயினைப் பூசுவர்; ஆராயின், பெறுதற்கரிய பயன்களைப் பெறுதற்கரிய காரணங்களால் முடித்துக் கொள்வர்; பெரியவா யுள்ள சிறப்புக்கள் பெரியரானே எய்தப்படும். ௩௫

மறக்களி மன்னர்முன் தோன்றும் ; சிறந்த
அறக்களி இல்லாதார்க்கு ஈயுமுன் தோன்றும் ;
வியக்களி நல்கூர்ந்தார் மேற்றாம் ; கயக்களி
ஊரில் பிளிற்றி விடும்.

வீரத்தான் வருங் களிப்புச் சேவகர்க்குத் தம்மைஆண்ட அரசர் முன்பு தோன்றும்; ஒருவன் மனத்தின்கண் மிக்க அறக்களிப்பு வறுமையுற்றார்க்கு உதவுமிடத்துத் தோன்றும்; எஞ்ஞான்றும் செல்வராயினார் தம்மையொன்று ஏவினால், அவ்

**34.** 14 ஒப்பது, ஒப்பதுவும் **35.** 5 - 6 நீருண்டால் நீரால்வாய், நீருண்ட நீரான்வாய்; 11 கொள்க; 13 பெரியாரின் **36.** 6 அல்லாதார்க்கு(ரி); 7 - 8. ஈயுமறனென்றும்; 14 பிளிற்று, பிலிற்றி

ஏவலான் வருங் களிப்பு நல்கூர்ந்தார் மாட்டுத் தோன்றும்; கயமையான்வருங் களிப்புத் தான் வாழும் ஊரின்கண் தோன்றி ஆரவாரம் பெருக்கிவிடும்.

அல்லதூஉம், 'வியக்களி நல்கூர்ந்தார் மேற்றும்' என்பது யாதானும் ஒரு பொருள் பெற்றால் அதனைக்கண்டு வியக்குங்களி நல்கூர்ந்தார் மாட்டுத் தோன்றும் என்றுமாம். ௩௬

மையால் தளிர்க்கும் மலர்க்கண்கள்; மால்இருள்
நெய்யால் தளிர்க்கும் நிமிர்சுடர்; பெய்ய
முழங்கத் தளிர்க்கும் குருகிலை; நட்டார்
வழங்கத் தளிர்க்குமாம் மேல்.

அஞ்சனத்தால் தளிர்க்கும் மலர்போன்ற கண்கள்; பேரிருளின்கண் நிமிர்ந்து எரியும் விளக்கு நெய்பெற்றால் தளிர்க்கும்; பெய்தற்கு முழங்கவே தளிர்க்கும் குருகிலை; நட்டார்க்குப் பொருள் வழங்கத் தளிர்ப்பர் மேலாயினோர். ௩௭

நகைஇனிது நட்டார் நடுவண்; பொருளின்
தொகைஇனிது தொட்டு வழங்கின்; தகைஉடைய
பெண்இனிது பேணி வழிபடின்; பண்இனிது
பாடல் உணர்வா ரகத்து.

நட்டார் நடுவணிருந்து [1]நகை இனிது; பொருளின் கூட்டம் இனிது தொட்டுவழங்குவா ராயின்; சிறப்புடைய பெண் இனிது தன்கொழுநனைப் பேணி வழிபடின்; பண் இனிது பாட்டின் தொழிலை அறிவாரிடத்து. ௩௮

கரப்பவர்க்குச் செல்சார் கவிழ்தல்;எஞ் ஞான்றும்
இரப்பவர்க்குச் செல்சார்ஒன் றுஈவோர்; பரப்புஅமைந்த
தானைக்குச் செல்சார் தறுகண்மை; ஊன்உண்டல்
செய்யாமை செல்சார் உயிர்க்கு.

**37.** 1-5 மையிற் றளிர்கரு மரக்கண மாயிரு ணெய்யிற்; 8 பெய்யல்(பி) **38.** 8 வகைமாண்ட, வகையுடைய, வகையுடைப்(பி) **39.** 6 செல்சார் வொன்று; 7 ஈவார(பி); 9 சேனைகருச்; 14-15 செல்சார்வுயிர்க்கு. 1 உவகை.

இரந்தவர்க்கு ஒன்று ஈயாமைக் கரப்பவர்க்குப் பற்றுக்கோடு முகங்கவிழ்தல்; எஞ்ஞான்றும் இரப்பவர்க்குப் பற்றுக்கோடா வார் யாதானும் ஒன்றனைக் கொடுப்பார்; பரப்பு நிரம்பிய சேனைக்குப் பற்றுக்கோடு தறுகண்மை; ஒருவன் உயிருக்குப் பற்றுக்கோடு ஊன் உண்ணுமை. ௩௯

கண்டதே செய்பவாம் கம்மியர்; உண்டுஎனக்
கேட்டதே செய்ப புலன்ஆள்வார்; வேட்ட
இனியவே செய்ப அமைந்தார்; முனியாதார்
முன்னிய செய்யும் திரு.

தாம் கண்ணுல் கண்டதனையே செய்ய வல்லாராம் கம்மியர்; உண்டென்ற நூலை நெறியால் கேட்டதனையே செய்வர் அறிவினை ஆள்வார்; தாம் காதலித்தனவற்றுள் எல்லார்க்கும் இனியன வற்றையே செய்வர் குணங்களான் அமைந்தார்; சினம்இல்லா தார் கருதினவற்றையே செய்யும் திருமகள். ௪0

திருவும் திணைவகையான் நில்லா; பெருவலிக்
கூற்றமும் கூறுப செய்துஉண்ணுது; ஆற்ற
மறைக்க மறையாதாம் காமம்; முறையும்
இறைவகையான் நின்று விடும்.

செல்வங்களும் குடிப்பிறப்பின் நன்மையான் நில்லா; பெரு வலியையுடைய கூற்றமும் தான் உண்ணப்படுகின்றவன் சொல் லுவனவற்றைச் செய்து உண்ணுது; மிகவும் மறைப்ப மறைவுண் ணுது காமமும்; முறைமையும் அரசன் வகையானே நிற்பது. ௪௧

பிறக்குங்கால் பேர்எனவும் பேரா; இறக்குங்கால்
நில்எனவும் நில்லா உயிர்எனைத்தும்; நல்லாள்
உடம்படின் தானே பெருகும்; கெடும்பொழுதில்
கண்டனவும் காணு கெடும்.

**40.** 1 கண்டது; 2 செயகுவா, செய்பவா, செய்வதாம், செய்வராம்; 5 கேட்டது; 6 செயவா; 7 புலனுள்வோா; 8 வேட்ப, பெட்ட, பெட்ப; 13 முன்னியவே(ரி) **41.** 3 இலலை; 7 செய்துண்ணு; 9-10 மறைகரு மறையாதார் **42.** 3 பேராது(ரி); 6 நில்லாது(ரி); 7 உயிரனைத்தும்; 14 காணுக(ரி)

உயிரெல்லாம் பிறக்கும்பொழுது தவிர் எனவும் தவிரா; இறக்குப்பொழுது நிற்க எனவும் நில்லா; திருமடந்தை மன மகிழ்ந்து உடம்படின் செல்வம் தானே பெருகும்; அச்செல்வம் கெடும்பொழுது கண்ணுற் காணப்பட்டுள்ளவாய் நின்ற பொருள் களும் காணப்படாவாய்க் கெடும். சஉ

போர்அறின் வாடும் பொருநர்சீர்; கீழ்வீழ்ந்த
வேர்அறின் வாடும் மரமெல்லாம்; நீர்பாய்
மடைஅறின் நீள்நெய்தல் வாடும்; படைஅறின்
மன்னர்சீர் வாடி விடும்.

போர் இன்றிவிடின் பொருபடையாளர் சீர்மை அழியும்; கீழ் வீழ்ந்த வேர்அறுமாயின் மரங்களெல்லாம் உலரும்; நீர்பாயும் மடையின்கண் நீர்அறின் நீண்ட நெய்தல் மலர்கள் உலரும்; சேனை இன்றிவிடின் அரசர் சீர்மை வாடும். சந

ஏதிலார் என்பார் இயல்புஇல்லார்; யார்யார்க்கும்
காதலார் என்பார் தகவுஉடையார்; மேதக்க
தந்தை எனப்படுவான் தன்உவாத்தி; தாய்என்பாள்
முந்துதான் செய்த வினை.

ஒருவர்க்கு அயலாராவார் குணம்இல்லாதார்; யாவர்க்கும் அன்புபடப்படுவார் குணமுடையார்; விரும்பத்தக்க தாதை எனப் படுவான் தன்னை ஓதுவித்தவன் ஒருவன்; தனக்குத் தாய் என்பாள் முற்பிறப்பில் தான்செய்த நல்வினை. சச

பொறிகெடும் நாண்அற்ற போழ்தே; நெறிபட்ட
ஐவரால் தானே வினைகெடும்; பொய்யா
நலம்கெடும் நீர்அற்ற பைங்கூழ்; நலம்மாறின்
நண்பினர் நண்பு கெடும்.

**43.** 1 போரின்றி; 4 வீழுந்தம்; 5 வேரின்றி; 9 மடையின்றி, மடைமிறின்; 12 படையின்றி, கொடையின்றி **44.** 1 ஏதிலர்; 3 இயைபி லார்(ரி); 5 காதலர்; 10 - 12 யுபாத்தி யெனப்படுவான் தாயெனப(ரி); 11 தன்வாத்தி **45.** 3 போதே; 4 நெறிப்பட்ட; 12–13 நலமாறு நண்பி ஞன்; 13 நண்பினர்(ரி)

செல்வம் கெடும் ஒருவற்கு நாண் இன்றி யொழிந்த பொழுதே; தன்வயத்தனவாய் வழிப்பட்ட ஐவகைப்பொறிகளாலும் பிறப்பிற்குக் காரணமாகிய வினை கெடும்; பழுதுபடாத விளைவின் நலங் கெடும் நீர்அற்ற பைங்கூழ்; மனத்தின்கண் உளதாம் ஈரம் துவரின் நண்புடையார் நண்பு கெடும்.

அல்லதூஉம், 'பொறி கெடும் நாணற்ற போழ்தே' என்பது கயிறற்றபொழுதே பாவையாகிய பொறிகெடும் என்றுமாம். சரு

நன்றிசாம் நன்றுஅறியா தார்முன்னர்; சென்ற
விருந்தும் விருப்பிலார் முன்சாம்; அரும்புணர்ப்பின்
பாடல்சாம் பண்அறியா தார்முன்னர்; ஊடல்சாம்
ஊடல் உணரா ரகத்து.

செய்த நன்றியை அறியாதாரிடத்துச் செய்த நன்றி கெடும்; விருப்புஇலாரிடத்துச் சென்ற விருந்து வாடும்; அரிதாகப் புணர்ந்த புணர்ப்பினையுடைய பாடல்கெடும், பண்ணினை அறியாதார் முன்பு; ஊடிய ஊடலும் கெடும், ஊடியவற்றை உணரா தொழிந்தார் மாட்டு. சசு

நாற்றம் உரைக்கும் மலர்உண்மை; கூறிய
மாற்றம் உரைக்கும் வினைநலம்; தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனம்உரைக்கும்; முன்னம்
முகம்போல முன்உரைப்பது இல்.

மலர்உண்டு என்பதனை அம்மலரினது நாற்றமே அறிவிக்கும்; ஒருவன் சொல்லியசொல்லே அறிவிக்கும் அவன் செய்கை நலத்தினை; ஆராயின் உட்கிடந்த தீமையை மனமே அறிவிக்கும்; மனத்தின் விளைவினை முகம்போல முற்பட அறிவிப்பது மற்றொன்று இல்லை. சஎ

46. 6 விரும்பிலார்; 8 மருந்தனைய; 14 உணர்வா 47. 9 அகம்பொதி; 10 தின்மை(சி); 11 முகனுரைக்கும்; 12 எல்லாம்

மழைஇன்றி மாநிலத்தார்க்கு இல்லை ; மழையும்
தவம்இலார் இல்வழி இல்லை ; தவமும்
அரசுஇலார் இல்வழி இல்லை ; அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல்.

மழைஇன்றிவிட்டால் உலகத்தின் மக்கட்கு உணவு இல்லை; அம் மழைதானும் தவஞ் செய்யாதார் இருப்பிடங்களுள் இல்லையாம்; அத் தவஞ்செய்கை தானும் அரசின் முறைமை இல்லாத அரசரிருப்பிடங்களுள் இல்லை; அவைபோல, இல்லையாம் அவ் அரசன் தானும் குடிகள் இல்லாத இடங்களுள். ௪௮

போதினான் நந்தும் புனைதண்தார் ; மற்றுஅதன்
தாதினான் நந்தும் சுரும்பெல்லாம் ; தீதுஇல்
வினையினான் நந்துவர் மக்களும் ; தத்தம்
நனையினான் நந்தும் நறு.

பூவினான் மிக்குப் பொலியும் புனையப்பட்ட தண் தார்; அப் பூவின் தாதினான் மிக்குப்பொலியும் வண்டுகளெல்லாம்; குற்றமில்லாத செய்கைகளான் மிகுவர் மக்களும்; தத்தம் நனை கொள்கையான் மிக்கு நல்லவாம் மதுக்கள். ௪௯

சிறந்தார்க்கு அரிய செறுதல்;எஞ் ஞான்றும்
பிறந்தார்க்கு அரிய துணைதுறந்து வாழ்தல்;
வரைந்தார்க்கு அரிய வகுத்தூண் ; இரந்தார்க்குஒன்று
இல்என்றல் யார்க்கும் அரிது.

தொடர்ச்சி மிக்கார்க்கு அரிய செறுதல்; பிறந்தார்க்கு எஞ் ஞான்றும் அரிய தம் இனத்தைத் துறந்து வாழ்தல்; உணவினை வரைந்தார்க்கு அரிய பிறர்க்குப் பகுத்து உண்டல்; இரந்து வந்தார்க்குத் தாம் ஒன்றினை இல்லைஎன்றல் யாவர்க்கும் அரிது.

**48.** 5 தவமிலான; 9 - 10 அரசிய லில்வழி, அரச ரிலாவழி, அரசிலா னில்வழி, அரசியலா னில்வழி; 13 இல்வாழ்வான் **49.** 1 பூவினான்; 3 புணர்தண்டார்; 11 மாககளும் **50.** 2, 6, 10 அரிது; 3 செறுத்தல்; 11 வகுத்தல்

இரைசுடும் இன்புறு யாக்கையுள் பட்டால்;
உரைசுடும் ஒண்மை இலாரை; வரைகொள்ளா
முன்னை ஒருவன் வினைசுடும்; வேந்தனையும்
தன்அடைந்த சேனை சுடும்.

பிணியினால் துன்பமுறுகின்ற உடம்பின்கண்பட்ட உணவு துன்பத்தைச் செய்யும்; அறிவின் ஒண்மையிலாதார்தம் வாயிற் சொல்லே தங்களைத் துன்பம் உறுத்தும்; முற்காலத்துச் சீலங்களை வரைந்து கொள்ளாது நெறியைக் கடந்து செய்த தீவினைகள் பிற்காலத்து வந்து சுடும்; வரைகொள்ளாத தன்னடைந்த சேனை வேந்தனைச்சுடும். இதற்கு முன்சொன்ன வரைகொள்ளா என்னுஞ் சொல்லை வருவித்துப் பொருளுரைத்துக் கொள்க. ருக

எள்ளற் பொருளது இகழ்தல்; ஒருவனை
உள்ளற் பொருளது உறுதிச்சொல்; உள்அறிந்து
சேர்தற் பொருளது அறநெறி; பன்னூலும்
தேர்தற் பொருள பொருள்.

ஒருவற்கு இகழத்தக்கது பிறரை இகழும் இகழ்ச்சி; ஒருவனை நட்புஎன்று உள்ளத்தகுவது அவன் சொல்லும் உறுதிச்சொல் லால்; உண்மையறிந்து அடையத்தக்கது அறநெறி; எப்பொழுதும் ஆராயத்தக்கன சகல நூல்களினுஞ் சொன்ன பொருள்கள்.

யாறுஉள் ளடங்குங் குளம்உள; வீறுசால்
மன்னர் விழையுங் குடிஉள; தொன்மரபின்
வேதம் உறுவன பாட்டுஉள; வேளாண்மை
வேள்வியோடு ஒப்ப உள.

யாறுகள் புகுந்தாலும் புறம்போகாது உள்ளடங்குங் குளங் களும் உள; சிறப்பு அமைந்த அரசரான் விரும்பப்படுங் குடிகளும் உள; பழைய மரபினையுடைய வேதங்களைப்போலும் பாட்டுக் களும் உள; யாகம்போலும் ஈகைகளும் உள. ருங

**51.** 3 யாக்கைபாழ்ப்; 8 வரைகொள்ள; 12 வேந்தனைத் **52.** 9 ஓதற்; 10 பொருளகள்; 14 பொருளே **53.** 1 ஆறுள்; 6 விளையும

**எருதுஉடையான் வேளாளன் ; ஏலாதான் பார்ப்பான் ;
ஒருதொடையான் வெல்வது கோழி ; உருவோடு
அறிவுஉடையாள் இல்வாழ்க்கைப் பெண்என்ப ; சேனைச்
செறிவுஉடையான் சேனா பதி.**

எருதுடையான் வேளாளன் ஆவான் ; ஓர்எற்றான் வெல்வதாயுள்ள கோழிபோல ஒருவரோடு ஒன்றும் மாறுபடாதான் பார்ப்பான் ஆவான் ; வடிவழகும் அறிவும் உடையாள் ஒருவற்கு இல்வாழ்க்கையுடைய பெண் ஆவாள் ; சேனையோடு மேவியிருப்போன் சேனாதிபதி ஆவான். ருச

**யானை யுடையார் கதன்உவப்பர் ; மன்னர்
கடும்பரிமாக் காதலித்து ஊர்வர் ; கொடுங்குழை
நல்லாரை நல்லவர் நாண்உவப்பர் ; அல்லாரை
அல்லார் உவப்பது கேடு.**

யானையுடையார் யானையினது சினத்தை உவப்பர் ; அரசராயினோர் கடிய செலவினையுடைய குதிரையைக் காதலித்து மேற்கொள்வர் ; கொடுங்குழையையுடைய நல்லாரை நல்லார் நாணால் உவப்பர் ; நாணுடையரல்லாத மகளிரை அறிவுடையரல்லாதார் உவந்தாற் கேடாம். ருரு

**கண்ணில் சிறந்த உறுப்புஇல்லை ; கொண்டானில்
துன்னிய கேளிர் பிறர்இல்லை ; மக்களின்
ஒண்மையவாய் சான்ற பொருள்இல்லை ; ஈன்றாளின்
என்ன கடவுளும் இல்.**

ஒருவற்குக் கண்போலச் சிறந்த உறுப்புப் பிறிதொன்று இல்லை ; தம்மைக் கொண்டானைப் போலச் செறிந்த கேளிர் மகளிர்க்கு இல்லை ; புதல்வரைப் போல நன்மைநெறி அமைந்த பொருள் இல்லை ; தன்னை யீன்றாள் போல்வதோர் [1]தெய்வம் எத் தெய்வத்துள்ளும் இல்லை. ருசு

**54.** 1 ஏருடையான் ; 3 இல்லாதான் ; 4 பார்ப்பானும், பார்பபானை; 5 ஒருடையான, நேருடைய ; 5-7 விருதுடையான வெல்ப கொளீஇ ; 11 பெண் என்பாள (ரி) ; 12 சேனை **55.** 8 கொடுங்குழைய ; 11 நாணுவப்ப(ரி) **56.** 4 - 12 கல்வியின், நுண்ணிய வாய பொருளில்லை கொண்டானில் துன்னிய கேளிர் பிறரில்லை யீனறாளில் ; 9 ஒண்லமயவாய்ச் ; 9-10 ஒண்மையவாய ; 12 ஈன்றுளோடு; 13 எண்ணக(ரி). 1 கடவுளும்.

**கற்றன்னர் கற்றாரைக் காதலர்; கண்ணோடார்
செற்றன்னர்; செற்றாரைச் சேர்ந்தவர் தெற்றென
உற்றது உரையாதார்; உள்கரந்து பாம்புஉறையும்
புற்றன்னர் புல்லறிவி னார்.**

கற்றா ரனையர் அக் கற்றாரைக் காதலிப்பவர்; ஓர் உயிர்க்கும் கண்ணோட்டம் இல்லார் இடும்பைசெய்வாரோடு ஒப்பர்; அவரைச் சேர்ந்தொழுகுவார் தெளியத் தம் நட்டார்க்கு உறுதியாயின உரையாதார்; உள்கரந்து பாம்பு உறையும் புற்றே அனையர் புல்லறிவினார். ருஎ

**மாண்டவர் மாண்ட வினைபெறுப; வேண்டாதார்
வேண்டா வினையும் பெறுபவே; யாண்டும்
பிறப்பால் பிறப்பார் அறன்இன் புறுவர்;
துறப்பார் துறக்கத் தவர்.**

அறிவான் மாட்சிமைப்பட்டார் மாட்சிமைப்பட்ட செயல்களைப் பெறுவர்; அம் மாட்சிமையை வேண்டாதார் தமக்கு விருப்பமில்லாத வினைப்பயன்களையும் பெறுவர்; எக்காலத்தும் மக்கட்பிறப்பில் பிறப்பாரெல்லாரும் அறத்தையே விரும்புவார்; துறக்கத்தையே வேண்டுவார் துறப்பார்கள். ருஅ

**என்றும் உளவாகும் நாளும் இருசுடரும்;
என்றும் பிணியும் தொழில்ஒக்கும்; என்றும்
கொடுப்பாரும் கொள்வாரும் அன்னர்; பிறப்பாரும்
சாவாரும் என்றும் உளர்.**

எக்காலத்தும் இடையறாது உளவாம் நாண்மீன்களும இருசுடரும்; ' எந்த நாள்களும் பிணிவருநாள்களும் உழவு முதலான தொழில்களும் எல்லாம் ஒக்கும்; எக்காலத்தும் கொடுப்பாரும் கொள்வாரும் உளர்; பிறப்பாரும் சாவாரும் எக்காலத்தும் உளராவர். எனவே உலகினது இடையறாமை உணர்த்தியவாறு.

**57.** 3 காதலிப்பார்; 4 கண்ணுடாச், கண்ணோடாச்; 8 தெறறனர், தெற்றென்ன, தெற்றன; **58.** 9 பிறப்பார்; 9-12 பிறபபார்துயரி லிலாபுறுவ ரென்றும **59.** 6-7 இனிய தொழிலோர்க்கும். 1 இந்த, எந்தெந்த, இறந்த.

**இனிதுஉண்பான் என்பான் உயிர்கொல்லாது உண்பான் ;
முனிதக்கான் என்பான் முகன்ஒழிந்து வாழ்வான் ;
தனியன் எனப்படுவான் செய்தநன்று இல்லான் ;
இனியன் எனப்படுவான் யார்யார்க்கே யானும்
முனியா ஒழுக்கத் தவன்.**

இனிதாக உண்பான் என்று சொல்லப்படுவான் ஓர் உயிரையும் கொல்லாதே உண்பான் ; எல்லாரானும் வெறுக்கத்தக்கான் என்பான் முகந்திரிந்து வாழ்வான் ; துணையில்லான் என்று சொல்லப்படுவான் தான்செய்ததொரு நல்வினை இல்லாதான் ; எல்லார்க்கும் இனியன் எனப்படுவான் யாவர்யாவர்க்கே யாயினும் வெறுக்கத்தகாத செய்கையை யுடையான். சா0

**ஈத்துஉண்பான் என்பான் இசைநடுவான் ; மற்றுஅவன்
கைத்துஉண்பான் காங்கி எனப்படுவான் ; தெற்ற
நகைஆகும் நண்ணார்முன் சேறல் ; பகைஆகும்
பாடுஅறியா தானை இரவு.**

பிறர்க்குக் கொடுத்துஉண்பான் என்று சொல்லப்படுவான் புகழை நிறுத்துவான் ; கொடுத்துண்பவன் கைப்பொருளை உண்பான் அவாமிக்கான் எனப்படுவான் ; தெளியவே இகழ்ச்சியாம் தன்னைவிரும்பாதார்முன்னர் ஒன்றனை நச்சிச்சேறல் ; தகுதி அறியானைச் சென்று இரந்தால் பகையாகும். சாக

**நெய்விதிர்ப்ப நந்தும் நெருப்பழல் ; சேர்ந்து
வழுத்த வரங்கொடுப்பர் நாகர் ; தொழூத்திறந்து
கன்றுஊட்ட நந்தும் கறவை ; கலம்பரப்பி
நன்றுஊட்ட நந்தும் விருந்து.**

நெய்யைப் பெய்ய நெருப்புச்சுடர் வளரும் ; அடைந்து போற்றத் தேவர் வரங்கொடுப்பர் ; தொழுவைத் திறந்து கன்றுகளை ஊட்டக் கறவைகள் நந்தும் ; கலங்களைப் பரப்பி மிகவும் ஊட்ட நந்தும் விருந்துகள். சாஉ

**60.** 7 முகமொழிந்து **61.** 5 கைத்துண்ணுன் **62.** 6 வரங்கொடுக்கும் ; 7 நாகம, தேவர்(பி) ; 8 கொளுத்திறநது

*பழிஇன்மை மக்களால் காண்க ; ஒருவன்*
*கெழுஇன்மை கேட்டால் அறிக ; பொருளின்*
*நிகழ்ச்சியான் ஆக்கம் அறிக ; புகழ்ச்சியான்*
*போற்றுதார் போற்றப் படும்.*

பழிபட வாழாமை ஒருவன்தன் மக்கட்பேற்றுனே அறிக ; ஒருவன் தனக்கு நண்புஅல்லாமை கேடுவந்தால் அறிக ; பொருள் வருகின்ற நன்மையானே ஒருவனது ஆக்கம் அறிக ; ஒருவன் புகழ்பட வழங்குமாயின் தன்பகையாலும் போற்றப்படும். ௬௩

*கண்ணுள்ளும் காண்புழிக் காதற்றும் ; பெண்ணுள்*
*உருஇன்றி மாண்ட உளவாம் ; ஒருவழி*
*நாட்டுள்ளும் நல்ல பதிஉள ; பாட்டுள்ளும்*
*பாடுஎய்தும் பாட்டே உள.*

தன்கண்ணுள்வைத்தும் காணும் இடம் அவனுற் காதலிக்குங் காதலை யுடைத்தாம் ; பெண்களுள் வடிவின்றியே குணமாண்டன உளவாம் ; ஒரு நாட்டுள் வைத்தும் ஒரு கூற்றுள்ளே நல்ல பதி உளவாம் ; பாட்டுக்கள் பலவற்றுள்ளும் பெருமைஎய்தும் பாட்டுக்கள் உள. ௬௪

*திரியழற் காணின் தொழுப ; விறகின்*
*எரியழற் காணின் இகழ்ப ; ஒருகுடியில்*
*கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றுன்*
*இளமைபா ராட்டும் உலகு.*

திரியான் எரியுஞ் சுடரைக் கண்டால் தொழுவர் ; விறகான் எரியுஞ் சுடரைக் கண்டால் இகழ்வர் ; அவைபோல, ஒரு குடிப் பிறந்து கல்விஇன்றியே மூத்தானைக் கைவிட்டு, இளையானுயினும் கற்றுனையே பாராட்டுவர் உலகத்தார். ௬௫

**63.** 5 கெழியின்மை ; 6 கேட்டில **64.** 3 காசற்றும் ; 4 பெண்ணின் ; 8 ஒருவள ; 14 பாடல்(ரி) ; 14 - 15 பாட்டுமுள **65.** 3 தொழுவர் ; 8 ஒரு குடியுட் ; 9 கல்லாத ; 10 மூத்தோனைக் ; 11 கைவிடுப

*கைத்துஉடையான் காமுற்றது உண்டாகும்; வித்தின்*
*முளைக்குழாம் நீர்உண்டேல் உண்டாம்; திருக்குழாம்*
*ஒண்செய்யாள் பார்த்துறின் உண்டாகும்; மற்றுஅவள்*
*துன்புறுவா ளாகின் கெடும்.*

கைப்பொருள் உடையான் காதலித்தது உளதாம்; வித்தின் முளைக்கூட்டம் நீர் உளதாயின் உளதாம்; செல்வக்கூட்டம் ஒள்ளிய செய்ய பூமகள் பரிவுறின் ஒருவற்கு உளதாம்; மற்று, அவள் காதலியாது துன்புறுமாயின் அச்செல்வத்தின் தொகுதி அவற்குக் கெடும். சுசு

*ஊன்உண்டு உழுவை நிறம்பெறூஉம்; நீர்நிலத்துப்*
*புல்லினான் இன்புறூஉம் காலேயம்; நெல்லின்*
*அரிசியான் இன்புறூஉம் கீழெல்லாம்; தத்தம்*
*வரிசையான் இன்புறூஉம் மேல்.*

ஊனை உண்டு புலி நிறம்பெறும்; நீருடைய நிலத்து எழுந்த புல்லினான் இன்புறும் நிரை முதலாயின; அதுபோல, நெல்லின் அரிசியால் பசிதீர்ந்து இன்புறுவர் கீழாயினோர்; மேலாயினோர் தத்தம் தகுதிச்செயலான் இன்புறுவர். சுஎ

*பின்னவாம் பின்அதிர்க்குஞ் செய்வினை; என்பெறினும்*
*முன்னவாம் முன்னம் அறிந்தார்கட்கு; என்னும்*
*அவாவாம் அடைந்தார்கட்கு உள்ளம்; தவாவாம்*
*அவாஇல்லார் செய்யும் வினை.*

கருத்தான் ஆராய்ந்து அறியாதார்க்குப் பின்பு நடுக்கத்தைச் செய்யும் வினைகள் தோன்றுவாம்; அறிந்தார்க்குப் பின்அதிர்க்கும் செய்வினைகள் என்பெறினும் முன்னவாகத் தோன்றும்; எல்லா வாற்றானும் அவாவேஆகும் யாதானும் ஒன்றனை அடைந்தார்க்கு உள்ளம்; கெடாவாம் அவாஇல்லார் செய்யும் வினைப்பயன்கள்.

**66.** 9 ஒண்செய்யான; 12-14 மற்றவன ஏமுறுவாளாகிற் **67.** 3 நிறம் பெறும்; 4 நீனிறப்; 6 நிறபநிறம்; 7 காலேகம, காலேசம், காலிகள்; 13 தகுதியான் **68.** 1 பினனவர்; 2 பினனெதிர்க்கும் 2-4 முன்னோர்க்குப் பின்னதிர்கருஞ் செயவினை; 8 என்றும; 13 அவாவிலார், வரவில்லார்

**கைத்துஇல்லார் நல்லவர் கைத்துஉண்டாய்க் காப்பாரின்;**
**வைத்தாரின் நல்லர் வறியவர்; பைத்துஎழுந்து**
**வைதாரின் நல்லர் பொறுப்பவர்; செய்தாரின்**
**நல்லர் சிதையா தவர்.**

கைப்பொருள் இல்லாதார் கைப்பொருள் உளராகிப் பாது காப்பாரின் மிக நல்லர்; அப்பொருளை வைத்துஇழப்பாரின் வறியவர் மிக நல்லர்; வெகுண்டுஎழுந்து வைதாரின் நல்லர் பொறுப்பவர்; உதவியைச் செய்தாரின் நல்லர் அதனை மறவாதார்.

அல்லதூஉம், 'செய்தாரின்நல்லர்சிதையாதவர்' என்பது அறஞ் செய்தாரின் நல்லர் அவ் அறத்தை அழியாதார் என்றுமாம். சுகூ

**மகன்உரைக்கும் தந்தை நலத்தை; ஒருவன்**
**முகன்உரைக்கும் உள்நின்ற வேட்கை; அகல்நீர்ப்**
**பிலத்துஇயல்பு புக்கான் உரைக்கும்; நிலத்துஇயல்பு**
**வானம் உரைத்து விடும்.**

மகனது குணமே பிறர்க்கு அறிவிக்கும் தந்தையது நற்செய் கையை; ஒருவன் முகமே உரைக்கும் அவன் மனத்தின்கண் உள்ள காதலை; அகன்ற நீர்மைபிலனயுடைய பிலத்தினது நன்மையைப் பிலத்தின்கண் புக்கவன் உரைக்கும்; நிலத்தின் மக்களது தன்மையை மழை பெய்தும் பெய்யாதும் அறிவிக்கும்

**பதிநன்று பல்லார் உறையின்; ஒருவன்**
**மதிநன்று மாசுஅறக் கற்பின்; நுதிமருப்பின்**
**ஏற்றான்வீறு எய்தும் இனநிரை; தான்கொடுக்குஞ்**
**சோற்றான்வீறு எய்தும் குடி.**

ஊர் நன்றும் பலரும் உறைவராயின்; ஒருவன் மதி நன்றும் மாசுஅற நூல் கற்பானாயின்; கூரிய கோட்டினையுடைய ஏற்றி னானே சிறப்புப் பெறும் இனநிரைகள்; பிறர்க்குக் கொடுக்குஞ் சோற்றினானே சிறப்புப் பெறும் தான் பிறந்த குடி. எக

**69.** 1 கைத்திலர்; 2-4 நலலராங் கைத்துண்டாக் காவாரின; 2-3 நல்லர்கைத துண்டாகிக் **70.** 4 ஒருத்தன்; 6 முன்னின்ற; 8 அகநீரப்; 9 புலததியல்பு, பிலத்தியல்(ரி); 12 நிலத்தியல் **71.** 2 பல்லோர்; 3 உறைவின்

ஊர்ந்தான் வகைய கலினமா ; நேர்ந்துஒருவன்
ஆற்றல் வகைய அறஞ்செயல் ; தோட்ட
குளத்துஅனைய தூம்பின் அகலங்கள் ; தத்தம்
வளத்துஅனைய வாழ்வார் வழக்கு.

ஏறினான் வகையவா யிருக்கும் முகக்கருவியை யுடைய புரவிகள்; தலைப்பட்டு ஒருவன் ஆற்றுதல் வகையவாம் அறஞ்செய்கை; தோண்டின குளத்தினது அளவினவாம் தூம்பின் வாய்கள்; தத்தம் வருவாய்க்குத் தக்க வகையவா யிருக்கும் மனைவாழ்வார் செய்கை. எஉ

ஊழியும் யாண்டுஎண்ணி யாத்தன ; யாமமும்
நாழிகை யானே நடந்தன ; தாழியாத்
தெற்றென்றார் கண்ணே தெளிந்தனர் ; வெட்கென்றார்
வெஞ்சொலால் இன்புறு வார்.

ஊழிகளும் யாண்டுகளானே எண்ணப்பட்டு யாப்புற்றுக் கழிந்தன; யாமங்களும் நாழிகையானே எண்ணப்பட்டு யாப்புற்றுக் கழிந்தன; தெளிந்தார் மாட்டே நீட்டியாது தெளிந்தனர் நல்லார்; வெள்ளிய அறிவினையுடையார் பிறர்க்கு இன்னாத வெஞ்சொற் சொல்லியே இன்புறுவர். எ௩

கற்றான் தளரின் எழுந்திருக்கும் ; கல்லாத
பேதையான் வீழ்வானேல் கால்முரியும் ; எல்லாம்
ஒருமைத்தான் செய்த கருவி ; தெரியின்மெய்
பொய்யாவித்து ஆகி விடும்.

கல்வியை யுடையவன் கேடுற்றானாயின் அதனான் இடர்ப்படாது எழுந்திருக்கும்; கல்லாத பேதையான் கேடுற்றானாயின் கால்முரிந்தார் போல எழமாட்டான்; ஒருவன் ஒருபிறப்பில்

72. 7 தறஞ்செய்கை(ரி), தறஞ செய்தல; 8 தொட்ட 73. 11 தெளிந்தன; 12 வெடடுகந்தாா, வெட்கு வந்தார்; 14-15 இனபுறுவர் மன் 74. 7 கானமுறியும்; 12 தெரியுங்கால, தெரிவெணணின்(ரி); 13 வீயாவித்; பொய்யாவித்தாகிவிடும் எனபதறகு மெயயுணர்ச்சி எனனும எழுவாய்வருவிக்க.

தான் செய்தனவெல்லாம் மறுபிறப்பின்கண் நுகரும் நுகர்ச்சிக்குக் காரணங்களாம்; மெய்யாகிய உணர்ச்சி பழுதுபடாத வீட்டுக்கு வித்தாம், ஆராயின். எச

**தேவர் அனையர் புலவரும்; தேவர்**
**தமர்அனையர் ஓர்ஊர் உறைவார்; தமருள்ளும்**
**பெற்றன்னர் பேணி வழிபடுவார்; கற்றன்னர்**
**கற்றாரைக் காத லவர்.**

தேவரே போல்வர் அறிவுடையார்; தேவர் தமரே அனையர் அவர் உறையும் ஊரின்கண் வாழ்வார்; அத் தமருள் வைத்துத் தேவரால் அருள்பெற்றவரோடு ஒப்பர் அச் சொல்லியவரைப் பேணி யொழுகுவார்; கற்றாரோடு ஒப்பர் கற்றாரைக் காதலித்து ஒழுகுவார். எரு

**தூர்ந்துஒழியும் பொய்பிறந்த போழ்தே; மருத்துவன்**
**சொல்என்ற போழ்தே பிணிஉரைக்கும்; நல்லார்**
**விடுகென்ற போழ்தே விடுக; அதற்குஉரியான்**
**தாஎனின் தாயம் வகுத்து.**

ஒருவனோடு கொண்ட நட்புத் தூர்ந்துவிடும், பொய்பிறந்த பொழுதே; பிணிக்கு மருந்து செய்வோன் சொல்லுக என்ற பொழுதே பிணியுற்றவன் தான் உற்ற பிணியைச் சொல்லும்; அதுபோல, அறிவுடைய நல்லார் இப்பெற்றிப்பட்ட தீவினைகளை விடுக என்றபொழுதே விட்டொழிக; ஒருபொருட்கு உரியான் தாஎன்றால் அவன் உரிமையைக் கூறிட்டுவிடுக.

விடுக என்னுஞ் சொல்லைப் பின்னுங் கூட்டுக. எசு

**நாக்கின் அறிப இனியவை; மூக்கினான்**
**மோந்துஅறிப எல்லா மலர்களும்; நோக்குள்ளும்**
**கண்ணினால் காண்ப அணியவற்றை; தொக்குஇருந்து**
**எண்ணினான் எண்ணப் படும்.**

75. 5-7 தமரனைய ரொருவா; 11 ஒழுகுவார்; 14-15 காதலிப்பார் 76. 9 விடுவெனற; 11-13 விடுதறகுரியன் றரவெனின்; தூர்ந்தொழியும் என்பதற்கு நட்பு என்னும எழுவாய வருவிக்க; 12-13 உரியானறருகெனின் (ரி) 77. 3 இனியன, இனியதை, இனிய சுவை; 8 நோககுண்ணும்; 11 அணிபவறறை, இனியவறறை

நாவினானே அறிப இனிய பொருள்களை; மூக்கினானே மோந்து அறிப எல்லாப் பூவினையும்; நோக்கு உண்டென்று கருதப் படுங் கண்ணினாற் காண்ப அணிய பொருள்களை; கண்ணாற் காணப்படாத சேயபொருள்களைப் பலரோடும் கூடியிருந்து அறிவானை ஆராயத்தகும். எஎ

சாவாத இல்லை பிறந்த உயிரெல்லாம்;
தாவாத இல்லை வலிகளும்; மூவா
இளமை இயைந்தாரும் இல்லை; வளமையில்
கேடுஇன்றிச் சென்றாரும் இல்.

பிறந்த உயிர் எல்லாவற்றுள்ளும் சாவாத உயிர்கள் யாவும் இல்லை; வலிகளுள்ளும் கெடாத வலிகள் இல்லை: மூத்துக் கழியாத இளமையைப் பெற்றாரும் இல்லை; செல்வத்தாற் கேடுஇன்றிச் சென்றாரும் இல்லை. எஅ

சொல்லான் அறிப ஒருவனை; மெல்லென்ற
நீரான் அறிப மடுவினை; யார்கண்ணும்
ஒப்புரவி னான்அறிப சான்றாண்மை; மெய்க்கண்
மகிழான் அறிப நறா.

ஒருவனது நன்மையையும் தீமையையும் அவன் சொல்லானே அறிப; மெல்லென்று நொய்தாய நீரான் அறிப மடுவினது நன்மையை; அதுபோல, யார்மாட்டும் செய்யும் ஒப்புரவினானே அறிப ஒருவனது சான்றாண்மையை; உடம்பின்கண் உள்ள களிப்பானே அறிப நறா உண்டமையை. எகூ

நாஅன்றோ நட்புஅறுக்கும்? தேற்றம்இல் பேதை
விடும்அன்றோ வீங்கப் பிணிப்பின்? அவாஅப்
படும்அன்றோ பன்னூல் வலையில்? அடும்அன்றோ
மாறுள் நிறுக்குந் துணிபு?

**78.** 8 மூவாது; 10 இசைந்தாரும்; 12 வளமையாற் **79.** 11 கண்ணோட்டம்; 13 மகிழ்வான **80.** 1 நடுவனறோ; 6 வீங்கிப்; 7-8 பிணிப்பின வாறு; 11 வலியில; 11-12 வலயம் நடுமனறோ; 12 கெடுமன்றோ; 13 வேற்றுள்

நா [1]நட்புக்கெடுக்கும் அன்றோ? ஆதலால் அதனைப் பாதுகாக்க. தெளிவில்லாத பேதை இறுகவே துன்பஞ்செய்து பிணிப்பின் தன் கைப் பொருளை விடும்அன்றோ? தன் ஆசை அகப்பட்டுக் கெடும்அன்றோ பல நூல்களையும் கற்றுவல்ல வலையின் கண்ணே?' ஒருவன் தன்னைக் கெடுக்கும்அன்றோ எல்லாரோடும் பகைகொள்ளும் பகைமையின்கண் தன்னை நிறுத்துந் துணிவு? ௮௦

*கொடுப்பின் அசனங் கொடுக்க ; விடுப்பின்*
*உயிர்இடை யிட்ட விடுக்க ; எடுப்பின்*
*கிளையுள் கழிந்தார் எடுக்க ; கெடுப்பின்*
*வெகுளி கெடுத்து விடல்.*

ஒருவற்குக் கொடுப்பானாயின் தன் உணவினைக் கொடுக்க; ஒன்றனை நீக்குவானாயின் ஒன்றன் உயிர்க்கு இடையூறு வந்தனவற்றை நீக்குக ; சிலரை எடுப்பானாயின் தன்கிளைகளுள் [2]தளர்ந்தாரை எடுக்க; ஒன்றனைக் கெடுப்பானாயின் தன் மனத்துள்ள வெகுளியைக் கெடுத்துவிடுக. ௮௧

*நலனும் இளமையும் நல்குரவின் கீழ்ச்சாம் ;*
*குலனும் குடிமையும் கல்லாமைக் கீழ்ச்சாம் ;*
*வளம்இல் குளத்தின்கீழ் நெல்சாம் ; பரம்அல்லாப்*
*பண்டத்தின் கீழ்ச்சாம் பகடு.*

வடிவழகும் இளமையும் வறுமை வந்தஇடத்திற் கெடும்; குலனும் குடிப்பிறப்பும் கல்லாமையுளதாயின் அவ்விடத்துக் கெடும் : வருவாயில்லாத குளத்தின்கீழ் விளையும் நெல் கெடும்; மிக்க பண்டத்தின்கீழ்ப் பகடு கெடும். ௮௨

*நல்லார்க்கும் தம்ஊர்என்று ஊர்இல்லை ; நன்னெறிச்*
*செல்வார்க்கும் தம்ஊர்என்று ஊர்இல்லை ; அல்லாக்*
*கடைகட்கும் தம்ஊர்என்று ஊர்இல்லை ; தம் கைத்து*
*உடையார்க்கும் எவ்வூரும் ஊர்.*

**81.** 2 இனிய ; 6 யீட்டை ; 10 அழிந்தார், அழிந்தாரை; 14 கழித்து **82.** 1 நலமும் ; 5 குலமும் ; 12 பரமல்லற(ரி) **83.** 1 கல்லார்க்கும் ; 8 கல்லாக ; 14-15 தம்மூரென்றில்(ரி). 1 நட்பு அறுக்கும். 2 தாழ்ந்தாரை

கல்வியான் நல்லார்க்கும் தம்மூரென்று ஊர்இல்லை, எல்லா வூரும் பயன்படும்; நன்னெறிச்செல்லும் அருந்தவர்க்கும் தம் ஊரென்று ஊர்இல்லை, எவ்வூரின்கண்ணும் பற்றுடையரல்லர்; கடையாயினார்க்கும் தம்மூரென்று ஊர்இல்லை, பயன்படா; தம் கைப் பொருளுடையார்க்கும் எவ்வூரும் ஊராய்ப் பயன்படும். அ௩

கல்லா ஒருவர்க்குத் தம்வாயில் சொல்கூற்றம்;
மெல்இலை வாழைக்குத் தான்ஈன்ற காய்கூற்றம்;
அல்லவை செய்வார்க்கு அறம்கூற்றம்; கூற்றமே
இல்இருந்து தீங்குஒழுகு வாள்.

கற்றறியா ஒருவர்க்குத் தம் வாயிற்சொல் கூற்றமாம்; மெல் லிலை வாழைக்குத் தான் ஈன்ற காயே கூற்றமாம்; மற்றைத் தீவினைகளைச் செய்வார்க்கு அறக்கடவுளே கூற்றமாம்; ஒருவன் மனையின்கணிருந்து தீதாக ஒழுகுவாள் அவற்குக் கூற்றமாம். அ௪

நீரான்வீறு எய்தும் விளைநிலம்; நீர்வழங்கும்
பண்டத்தால் பாடுஎய்தும் பட்டினம்; கொண்டுஆளும்
நாட்டான்வீறு எய்துவர் மன்னவர்; கூத்துஒருவன்
ஆடலால் பாடு பெறும்.

நீரினாற் சிறப்புப் பெறும் விளைநிலம்; கடலான் வரும் பண் டத்தானே பெருமை பெறும் பட்டினங்கள்; தாம் கொண்டு ஆளப்படுகின்ற நாட்டினாற் சிறப்புப் பெறுவர் அரசர்; நாடகங்கள் வல்லானொருவன் ஆடுதலாற் பெருமை பெறும்.

'பாடலாற்பாடுபெறும்' என்று பாடம் ஓதுவாரும் உளர். அ௫

ஒன்றுஊக்கல் பெண்டிர் தொழில்நலம்; என்றும்
அறன்ஊக்கல் அந்தணருள்ளம்; பிறன்ஆளும்
நாடுஊக்கல் மன்னர் தொழில்நலம்; கேடுஊக்கல்
கேளிர் ஒரீஇ விடல்.

**84.** 2 - 3 ஒருவறகுத் தன்வாயில; 5 மெல்லிய; 10 செய்தார்கரு; 13 இலலத்துத **85.** 8 கொண்டெய்தும்; 10 எய்துப; 10 - 11 எய்துமா மனனவன்; 13-15 பாட்டால் வீறெய்தப்படும்; 13 பாடலாற **86.** 5 நன்றூக் கல்; 8 பிறந்தாளும்; 9 நாடுகோள; 12 கேடுககம், கேடுககரும்

ஒருமைப்பட்ட மனத்தால் தம் கொழுநர் வழியே முயன்று ஒழுகுதல் பெண்டிர்க்குத் தொழில் நலமாவது; எஞ்ஞான்றும் அறத்தினையே முயன்றுஒழுகுதல் மறையவர்க்குக் கருத்தாவது; பிறன்ஓர் அரசன் ஆளும் நாட்டினைக் கொள்ள முயறல் மன்னரது தொழில் நலமாவது; தமக்குக் கேட்டினை முயன்றுஒழுகுதலாம் தம்கேளிரை நீக்குதல். அ௬

கள்ளாமை வேண்டும் கடிய வருதலால்;
தள்ளாமை வேண்டும் தகுதி உடையன;
நள்ளாமை வேண்டும் சிறியரோடு; யார்மாட்டும்
கொள்ளாமை வேண்டும் பகை.

களவு காணாமை வேண்டும் அஞ்சத்தகுந் துன்பத்தொடு வருதலால்; தனக்குத் தகுதியுடைய ஒழுக்கத்தை நீங்காமை வேண்டும்; சிறியாரோடு நட்புக்கொள்ளாமை வேண்டும்; யாவர்மாட்டும் பகை கொள்ளாமை வேண்டும். அ௭

பெருக்குக நட்டாரை நன்றின்பால் உய்த்து;
தருக்குக ஒட்டாரைக் காலம் அறிந்தே;
அருக்குக யார்மாட்டும் உண்டி; சுருக்குக
செல்லா இடத்துச் சினம்.

[1]நட்டாரை நன்மையின்கண் செலுத்திப் பெருக்குவிக்க; பகைவரைக் காலம்அறிந்து வலிசெய்க; யாவர் மனையகத்தும் உண்டலைத் தவிர்க; தனக்குச் செல்லாஇடத்தில் [2]சினத்தைச் சுருக்குக. அ௮

மடிமை கெடுவார்கண் நிற்கும்; கொடுமைதான்
பேணாமை செய்வார்கண் நிற்குமாம்; பேணிய
நாணின் வரைநிற்பர் நற்பெண்டிர்; நட்டுஅமைந்த
தூணின்கண் நிற்கும் களிறு.

**87.** 11 சிறியாரோடு **88.** 2 நாட்டாரை; 6 மாற்றாரை; 8 அறிந் தாங்கு **89.** 1 மடமை; 8 பேணியல், பேணிலல; 13 தூணினபால், தூணின்வரை. 1 நாட்டாரை. 2 சீற்றத்தை விடுகக.

கெடக்கடவார்மாட்டு முயற்சியின்மை நிற்கும்; பிறர் விரும்பாதன செய்வார்மாட்டுக் கொடுமை நிற்கும்; விரும்பப்பட்ட நாணெல்லையின்கண் நிற்பர் நற்பெண்டிர்; நட்டு அமைவுடைத்தாய தூணின்கண் நிற்பது களிறுவது. ௮௯

**மறைஅறிப அந்தணர் புலவர்; முறையொடு**
**வென்றி அறிப அரசர்கள்; என்றும்**
**வணங்கல் அணிகலம் சான்றோர்க்கு; அஃதுஅன்றி**
**அணங்கல் வணங்கின்று பெண்.**

மறைநூலை அறிவர் அந்தணராய புலவர்; நடுவு செய்கையொடு பகைவரை வெல்கையை அறிவர் அரசர்கள்; எஞ்ஞான்றும் எல்லார்க்கும் பணிந்தொழுகுதல் சான்றோர்க்கு அணிகலம் ஆவது; அப்பெற்றியன்றி, தெய்வத்தைச் சார்ந்தொழுகுதலின்றியே கொழுநனையே தொழுவது பெண்ணுவார்க்கு அணிகலம் ஆவது. ௯௦

**பட்டாங்கே பட்டுஒழுகும் பண்புஉடையாள்; காப்பினும்**
**பெட்டாங்கு ஒழுகும் பிணையிலி; முட்டினும்**
**சென்றாங்கே சென்றுஒழுகும் காமம்; கரப்பினும்**
**கொன்றான்மேல் நிற்கும் கொலை.**

பெண்டிர்க்குச் சொல்லிய [1]கற்புடைமை நெறியின்கண்ணே யுளளாய் ஒழுகும் குணம்உடையாள்; எல்லாக் காவலும் உளவாயினும் தான் நினைந்தபடியே ஒழுகும் நல்லாரான் விரும்பப் படாதாள்; இடையூறுபட்டு முடியாதாயினும் சென்றவிடத்தே சென்றுஒழுகும் காமமானது; மறைக்கினும் கொன்றான் மேலே வெளிப்படும் கொலையானது. ௯௧

**வன்கண் பெருகின் வலிபெருகும்; பால்மொழியார்**
**இன்கண் பெருகின் இனம்பெருகும்; சீர்சான்ற**
**மென்கண் பெருகின் அறம்பெருகும்; வன்கட்**
**கயம்பெருகின் பாவம் பெரிது.**

**90.** 12 அஃதினறி; 13 - 14 அணங்கை வணங்கலள்(ரி); 14 வணங்குவ, வணங்குவள **91.** 3 அனபுடையாள்; 5 - 6 பெட்டாங்கே பெட்கும்(ரி); 6-7 ஒழுகுநறபிடில்லாள்; 7 பிணியிலி; 8 முட்டுறினும்; 13 கொன்றோர்மேல் **92.** 7-8 மயல பெருகும் சானறவர்; 8 அச்சான்ற. 1 உண்மை.

ஒருவர்க்கு அஞ்சாமை பெருகின் வலி பெருகும்; பால் போன்ற மொழியினையுடைய மனைவியர் கண்ணோட்டம் பெருகின் சுற்றம் பெருகும்; புகழ் அமைந்த [1]அருள் பெருகின் அறவினை பெருகும்; வன்கண்மையுடைய கீழ்மைக்குணம் பெருகின் பாவம் பெரிது. ௯௨

*இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்;*
*வளம்இலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்;*
*கிளைஞர்இல் போழ்தில் சினம்குற்றம்; குற்றம்*
*தமர்அல்லார் கையகத்து ஊண்.*

இளமைக் காலத்துக் கல்லாது ஒழிதல் குற்றமாம்; வருவாயில்லாத காலத்து வள்ளன்மை குற்றமாம்; தனக்குச் சுற்றத்தார் இல்லாத காலத்துப் பிறரோடு வெகுளல் குற்றமாம்; தமர் அல்லாதார் கையகத்து உணவை உண்டலும் குற்றமாம். ௯௩

*எல்லா இடத்தும் கொலைதீது; மக்களைக்*
*கல்லா வளர விடல்தீது; நல்லார்*
*நலம்தீது நாண்அற்று நிற்பின்; குலம்தீது*
*கொள்கை அழிந்தக் கடை.*

நன்மை பயந்ததாயினும் எல்லா இடத்தும் கொல்கை தீதாம்; புதல்வரைக் கல்லாது வளரவிடுதல் தீதாம்; நல்லாருடைய வடிவழகு தீதாம், நாண் இல்லாராய் நிற்பின்; தாம் பிறந்த குலம் தீதாம், குலத்துக்குத் தக்க ஒழுக்கம் அழிந்த இடத்து. ௯௪

*ஆசாரம் என்பது கல்வி; அறஞ்சேர்ந்த*
*போகம் உடைமை பொருளாட்சி; யார்கண்ணும்*
*கண்ணோட்டம் இன்மை முறைமை; தெரிந்துஆள்வான்*
*உண்ணாட்டம் இன்மையும் இல்.*

**93.** 3 இல்லாமை; 13 தமரல்லர்; 14 - 15 கைததூணுணல்; 14 இல்லகத்து, கைத்துள்ளது(பி) **94.** 5 கல்லார்; 14 - 15 அழிந்தவிடை, அழிந்தவிடத்து(பி) **95.** 9 - 10 கண்ணோட்ட லன்மை. 1 வளம்.

ஒருவற்குக் கல்வியின் பயனாவது ஆசாரம் என்று சொல்லப் படுவது; ஒருவற்குப் பொருளாட்சியின் பயனாவது அறத்தைச் செய்து இன்பத்தை நுகர்தல்; யாவர்மாட்டும் கண்ணோடாமை நடுவுசெய்தல் முறைமையாவது; ஆராய்ந்து அரசினை ஆள்வான் [1]மனத்தால் ஆராயாது ஒன்றனையும் செய்தலில்லை. கூரு

**கள்ளின் இடும்பை களிஅறியும்; நீர்இடும்பை**
**புள்ளினுள் ஓங்கல் அறியும்; நிரப்புஇடும்பை**
**பல்பெண்டி ராளன் அறியும்; கரப்புஇடும்பை**
**கள்வன் அறிந்து விடும்.**

கள் [2]பெருமையான் வரும் இடும்பையைக் கள் உண்டு களிப் பவன் அறியும்; நீர்பெருமையான் வரும் இடும்பையைப் புள்ளி னுள் வைத்துச் சாதகப் புள் அறியும்; பொருளைத் தேடும் இடும் பையைப் பல்பெண்டிராளன் அறியும்; கரத்தலருமையின்கண் வரும் இடும்பையைக் கள்வன் அறியும். கூசா

**வடுச்சொல் நயம்இல்லார் வாய்த்தோன்றும்; கற்றார்வாய்ச்**
**சாயினும் தோன்றா கரப்புச்சொல்; தீய**
**பரப்புச்சொல் சான்றார்வாய்த் தோன்றா; கரப்புச்சொல்**
**கீழ்கள்வாய்த் தோன்றி விடும்.**

பிறர்க்குப் பழியாயின கூறுதல் ஈரம் இல்லாதார் வாயில் தோன்றும்; கற்றார்வாயின்கண் சாயினும் உளவாகா வஞ்சனைச் சொல்; தீயவற்றைப் பரப்புஞ் சொல் சான்றார் வாயின்கண் தோன்றா; இரந்தார்க்கு இல்லையென்னுங் கரப்புச் சொல் கீழ் மக்கள் வாயின்கண் தோன்றும். கூஎ

**வாலிழையார் முன்னர் வனப்புஇல்லான் பாடுஇலன்;**
**சாலும் அவைப்படின் கல்லாதான் பாடுஇலன்;**
**கற்றா னொருவனும் பாடுஇலனே கல்லாதார்,**
**பேதையார், முன்னர்ப் படின்.**

**97.** 10 சான்றோர்வாய்; 13 கீழ்கள்பால் **98.** 3 - 4 வனப்பில்லார் பாடி லர், வனப்பிலார் பாடிலர்; 9 கற்றோ; 11 பாடிலன்; 12 கல்லாத, கல்லா தான். 1 கருத்துள் நாடாது. 2 நன்மையான்

வாலிய அணியையுடைய மகளிர்முன்னர் அழகு இல்லாதார் பெருமை இலர்; நிரம்பிய அறிவினையுடைய அவையில் புக்கால் கல்லாதான் பெருமை இலன்; கற்றவனும் பெருமை இலன் கல்லாதார் முன்னரும், பேதையார் முன்னரும். கூஅ

மாசு படினும் மணிதன்சீர் குன்றாதாம்;
பூசிக் கொளினும் இரும்பின்கண் மாசுஓடும்;
பாசத்துள் இட்டு, விளக்கினும், கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும்.

நன்மணி மாசுபட்டனவாயினும் தன் விழுப்பம் குன்றாதாம்; கழுவிக்கொள்ளினும் இரும்பின்கண் மாசுஅடையும்; தளை முதலாயினவற்றுள் இட்டு ஒறுப்பினும், அறிவு கொளுத்தி அவன் அறிவை விளக்கினும், கீழாயினான் தன் செய்கைகளாங் கீழ்மையைக் காட்டிவிடும். கூகூ

எண்ஒக்கும் சான்றோர் மரீஇயாரின் தீராமை;
புண்ஒக்கும் போற்றார் உடனுறைவு; பண்ணிய
யாழ்ஒக்கும் நட்டார் கழறுஞ்சொல்; பாழ்ஒக்கும்
பண்புஉடையாள் இல்லா மனை.

அறிவினை ஒக்கும் மருவி அமைந்தாரை நீங்காமை; புண்ணினை ஒக்கும் பகைவருடன் உறைந்து ஒழுகுதல்; பண்ணிய யாழோசையை ஒக்கும் நட்டார் இடித்துச் சொல்லுஞ் சொல்; குணமுடைய மனையாளை இல்லாத மனை பாழினை ஒக்கும். க00

ஏரி சிறிதாயின் நீர்ஊரும்; இல்லத்து
வாரி சிறிதாயின் பெண்ஊரும்; மேலைத்
தவம்சிறி தாயின் வினைஊரும்; ஊரும்
உரன்சிறி தாயின் பகை.

**99.** 3-4 மணி தஞ்சீர் குன்றுவாம்; 7 இரும்பின்றன்; 8 மாசொட்டும் **100.** 3 மரீயாரிற், மதியாரிற், அரியராத்(ரி); 8 பண்ணியல்; 13 பண்புடையார் **101.** 3 நீரருகும்; 9 தவஞசிறிய; 13 உரம்சிறி, முரண்சிறி, உரஞ்சிறிய

குளம் சிறிதாயின், நீர்போம்; மனையிற்புகும் வருவாய் சிறிதாயின், மனையாள் கொழுநனை மதியாது மேற்கொள்ளும்; முன்னாள் செய்த தவம் சிறிதாயின், தீவினை வந்து மேற்கொள்ளும்; வன் வலி சிறிதாயின், பகைவந்து அடரும். ௧௦௧

**அலைப்பான் பிறிதுஉயிரை ஆக்கலும் குற்றம்;**
**விலைப்பாலிற் கொண்டுஊன் மிசைதலும் குற்றம்;**
**சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்;**
**கொலைப்பாலும் குற்றமே ஆம்.**

வருத்திக் கொல்லுதற் பொருட்டுப் பிறிதோர் உயிரை வளர்த்தலும் குற்றம்; விலைக்குக் கொண்டு ஊனை உண்ணுதலும் குற்றம்; சொல்லத் தகாதனவற்றைச் சொல்லுதலும் குற்றம்; கொலையும் குற்றமே ஆகும்.

பால் - பகுதி. ௧௦௨

**மனைக்கு விளக்கம் மடவாள்; மடவாள்**
**தனக்குத் தகைசால் புதல்வர்; மனக்குஇனிய**
**காதற் புதல்வர்க்குக் கல்வியே; கல்விக்கும்**
**ஓதின் புகழ்சால் உணர்வு.**

மனைக்கு விளக்காய் அமைபவள் மனைவி; அம் மனைவிக்கு விளக்காய் அமைபவர் புதல்வர்கள்; மனத்திற்கு இனிய அன்பினையுடைய அப் புதல்வர்களுக்கு விளக்காய் அமைவது கல்வி; அக் கல்விக்கு, சொல்லுவதாயின், புகழ் நிரம்பிய அறிவே விளக்கு ஆகும்.

ஒப்பிடுக: மனைக்கு விளக்காகிய வாணுதல் (புறம் 314). ௧௦௩

**102.** இது சில பிரதிகளில் மலைப்பினும் (25) என்பதன் பின்னும் சில பிரதிகளில் 'அஞ்சாமை அஞ்சுக' (27) என்பதன் பின்னும் உள்ளது; 2 பிறவுயிரை. 102-3 இந்த இரண்டு செய்யுட்களும் நான்மணிக் கடிகையில் உள்ளனவாகப் புறத்திரட்டில் தொகுக்கப்பட்டுள்ளன; உரை புதிதாய் எழுதியது. **103.** இது 37-ன் பின்; 2 விளக்கு; 3, 4 மட்வார்(ரி); 5 தமக்கு(ரி); 6 விளக்கு; 5-6 தனக்குச் சால்பாகும்; 8 தனக்கினிய; 13 ஓதிய

# செய்யுள் முதற் குறிப்பு

# நூற்பொருள்

# சொல் - தொடர் அகராதி

## [எண் - செய்யுள் எண்]

---

# அருஞ்சொற் பொருள்

அஃகும் - குறையும்
அகம்பொதிந்த - மனத்துள் கிடந்த
அசனம் - உணவு
அசுணமா - இசை அறிவதோர் விலங்கு
அடல் - கெடுத்தல்
அணங்கல் - தெய்வம் அல்லாதது
அணியவற்றை - சமீபத்திலுள்ளவைகளை
அதிர்த்தல் - கலங்குதல்
அருக்குக - சுருக்குக
அரும்புணர்ப்பின் - அருமையாக யாத்த யாப்பினையுடைய
அலைப்பான் - கொல்லும் பொருட்டு
அலைப்பினும் - வருத்தினாலும்
அவா - இல்லதன் மேற் செல்லும் உளப்பற்று
அவை - சபை
அவைக்குட்டம் - சபையினது கடத்தற்கரிய தன்மை
அறக்களி - தருமஞ் செய்வதனாலுண்டாகும் மகிழ்ச்சி
அன்னே - தாயே (அன்னை என்ற பெயரின் விளி)
ஆக்கம் - செல்வம்
ஆர்தல் - உண்ணுதல்
ஆற்ற - மிகவும்
ஆற்றல் - சக்தி
ஆற்றின் - வழியின்
ஆனிரை - பசுக்கூட்டம்
இசை - புகழ்
இடும்பை - துன்பம்
இடையிட்ட - இடையூறாக வந்தன
இப்பாலுலகம் - இவ்வுலகம்
இரந்தார்க்கு - யாசித்து வந்தவர்க்கு
இரவு - யாசகம்
இருசுடரும் - இரண்டு ஒளியும் (சந்திர சூரியர்)
இரை - உணவு
இழையார் - ஆபரணத்தையுடைய பெண்கள்
இறுவாய்த்து - முடிவை இடமாக உடையது
இறை - அரசன்
இன்கண் - இரக்கம்
இன்னா - துன்பம்
இனநிரை - கூட்டமான மாடுகள்
ஈத்து - கொடுத்து
உடைக்கிற்கும் - வென்று செல்லும்
உய்த்து - செலுத்தி
உள்நாட்டம் - மனத்தால் ஆராய்தல்
உரன் - வலி
உரு - வடிவழகு
உரைக்கும் - அறிவிக்கும்
உவகை - மகிழ்ச்சி
உழி - இடம்
உழுவை - புலி
உள்ளப்படும் - நினைக்கப்படும்
உள்ளம் - மனம்
உள்ளல் - நினைத்தல்
உறுவன - போல்வன

உருமுதல் - அடையாமைக்குரிய காரணம்
ஊக்கல் - முயன்று ஒழுகுதல்
ஊரும் - மிக்குவழியும், அடரும், மதியாது மேற்கொள்ளும்
எஞ்சாமை - தவிரா தொழிக
எடுப்பின் - தாங்குவாராயின்
எண் - அறிவு, ஆராய்ச்சி
எதிர்மலர் - செவ்விமலர்
எள்ளல் - இகழல்
எனைத்தும் - எல்லாம்
ஏதிலார் - அயலார்
ஏலாதான் - மாறுபடாதவன்
ஏறு - காளை
ஐவர் - ஐவகைப் பொறிகள்
ஒட்டார் - பகைவர்
ஒண்மை - விளக்கம்
ஒப்புரவினல் - உபகாரத்தினல்
ஒருமை - ஒரு பிறப்பு
ஒள் - விளக்கம்
ஓங்கல் - சாதகப்புள்
கடந்துவிடும் - வென்றுவிடும்
கடற்குட்டம் - கடலினது ஆழம்
கடிய - அஞ்சத்தக்கன
கண்ணோட்டம் - தன்னொடு பழகினர் கூறியன மறுக்க மாட்டாமை
கண்மாறல் - புறக்கணித்தல்
கதம் - கோபம்
கந்து - கட்டுத்தறி
கம்மியர் - கம்மாளர்
கயக்களி - கீழ்மையான் வருஞ் செருக்கு
கயத்தை - கீழ்மக்களை
கயம் - கீழ்மை, கீழ்மக்கள்
கரப்பிடும்பை - மறைத்தலினல் வருந்துன்பம்
கரப்பு - மறைப்பு
கரவு - வஞ்சனை
கருவி - காரணம்
கல் - மலை
கலம் - பாத்திரம்
கலவர் - மரக்கலமுடையார்
கலினம் - கடிவாளம்
கழறுஞ்சொல் - கண்டிக்குஞ் சொல்
கழி - மிகுதி
கழிமடம் - மிக்க பேதைமை
கழிவிரக்கம் - பச்சாத்தாபம்
கள்ளாமை - களவு செய்யாமை
களி - களிப்பு, கள்ளுண்பவன்
கற்பு - கல்வி
கற்றன்னர் - கற்றரோடு ஒப்பர்
காங்கி - அவாமிக்கவன்
காதற்று - காதலையுடையது
காலேயம் - பசு முதலிய புல் லுண்ணும் நாற்காற் பிராணிகள்
குட்டம் - ஆழம்
குருகிலே - மேக முழக்கத்தால் தளிர்ப்பதாகக் கூறும் ஒரு மரம்
குழவி - குழந்தை
கூற்று - (கூற்றம்) யமன்
கெழு இன்மை - நட்பு இல்லாமை
கைத்து - கைப்பொருள்
கேளிர் - சுற்றத்தார்
கொந்தி - கழறி (கண்டித்துச் சொல்லி)
கொலைப்பாலும் - கொலை செய்யும் பகுதியும்
கொள்கை - ஒழுக்கம்
கொள்ளார் - பகைவர்
கோடாமை - நடுநிலை தவறுமை
கோள் - இயற்கை, கொள்கை
சாயினும் - கெட்டாலும்
சிலைப்பினும் - கோபித்தாலும்

சிற்றில் - சிறுகுடி
சீறற்க - கோபியாதிருக்க
சுரும்பு - வண்டு
செய்யாள் - இலக்குமி
செல்சார் - பற்றுக்கோடு
செற்று - துன்பஞ் செய்து
செறுதல் - கோபித்தல்
சோ - வாணாசுரன் அரண்
தத்துவம் - உண்மை
தமர் - சுற்றத்தார்
தருக்குக - வலி செய்க
தவா - கெடா
தறுகண்மை - அஞ்சாமை
தனியன் - துணையில்லாது ஒன்றியானவன்
தாங்கிய - காப்பாற்றிய
தாது - தேன்
தாயம் - உரிமை
தாவாத - கெடாத
திணை - குடிப்பிறப்பு
திரியழல் - திரியால் எரியுஞ் சுடர்
திருக்குழாம் - செல்வக்கூட்டம்
துயில் - உறக்கம்
துறக்கத்தார் - சுவர்க்கத்தை விரும்புபவர்
துறந்து - நீக்கி
தூக்கின் - ஆராயின்
தூம்பு - மதகு
தெற்றென்றார் - தெளிந்தார்
தெற்றென - தெளிவாக
தேர்தல் - ஆராய்தல்
தேற்றம் - தெளிவு
தொக்கிருந்து - கூடியிருந்து
தொட்டு - குறித்து
தோட்ட - தோண்டின
தோம் - குற்றம்
நகை - இகழ்ச்சி
நசை - விருப்பம்
நட்டார் - நண்பர்
நண்ணார் - பகைவர்
நந்தும் - பெருகும்
நயம் - ஈரம்
நலம் - அழகு
நல்லாள் - இலக்குமி
நல்குரவு - வறுமை
நள்ளாமை - நட்புக் கொள்ளாமை
நறா - கள்
நனை - பூவரும்பு
நாட்டம் - ஆராய்ச்சி
நாடாமை - ஆராயாமை
நாண் - வெட்கம்
நாற்றம் - மணம்
நிரப்பிடும்பை - நிறைத்தலால் வருந்துன்பம்
நிரப்பு - பொருள் தேடுதல்
நிறை - மிகுதி, கற்பு
நீர் - கடல்
நீரான் - தண்ணீரால்
நீளூரும் - நீர்போம்
நுதி - கூர்மை
நெய்தல் - கருங்குவளை
நோய் - துன்பம்
பசைந்தார் - அன்பு பொருந்தியவர்
பட்டாங்கு - உண்மை, கற்புடைமை நெறி
பட்டு - பொருந்தி
படரும் - செல்லும்
படி - பூமி
பண் - குதிரைக் கல்லணை, ஒழுக்கம், யாழின் நரம்பு வீக்குதல்
பரப்புச்சொல் - பரப்புஞ்சொல்
பரம் - தாங்குதற்கரிய, மிக்க
பழனத்து - பொய்கையிடத்து
பாசம் - தளை
பாடறியாதானை - பெருமை அறியாதவனை

பாடு - பெருமை, தகுதி
பாய்மா - குதிரை
பார்த்துறல் - பரிவுறல்
பிணிப்படுத்தல் - கட்டுதல்
பிணையிலி - விரும்பப்படாதவள்
பிலம் - குகை
பிளிற்றல் - ஆரவாரம் செய்தல்
பீடு - பெருமை
புலன் - அறிவு
புலை - இழிவு
புற்கம் - புல்லறிவு
பூசுப - அலம்புவர்
பூவை - காயா என்னும் மரம்
பெட்டாங்கு - விரும்பியபடி
பேணமை - பாதுகாவாமை
பேதைமை - அறிவின்மை
பேர் - தவிர்
பேரா - தவிரா
பைங்கூழ் - இளம்பயிர்
பைத்து - கோபித்து
பொருநர் - பொரு படையாளர்
பொருள் - நூல் (ஆகுபெயர்)
பொறி - செல்வம், இயந்திரம்
போழ்ப - பிளவுபடுப்பர்
போற்றார் - பகைவர்
மகிழான் - களிப்பினால்
மடம் - அறிவின்மை
மடியகத்து - வயிற்றிடத்து
மடிமை - முயற்சியின்மை
மண்ணி - கழுவி
மம்மர் - மயக்கம்
மருப்பு - கொம்பு
மலைப்பினும் - வருத்தினாலும்
மாசுடைமை - குற்றமுடைமை
மாண்ட - மாட்சிமையுடைய
மால் - மிகுதி
மாற்றம் - சொல்
மாறுள் - பகையுள்
மிகுதி - செருக்கு
முகனொழிதல் - முகந்திரிதல்
முட்டினும் - இடையூறுபட்டாலும்
முறை - நடுவு செய்கை
முன்னம் - குறிப்பு
முனிவு - கோபித்தல்
மென்கண் - அருள்
மே - விருப்பம்
மை - கண்ணுக்கிடும் மை
மொய் - பெருமை
வகுத்தூண் - பகுத்து உண்ணுதல்
வடுச்சொல் - பழியான சொல்
வண்மை - ஈகை
வணங்கின்று - வணங்குவது
வரிசை - தகுதிச் செயல்
வரை - எல்லை
வரைந்தார்க்கு - அளவு சுருங்கக் கொண்டவர்களுக்கு
வழக்கு - செய்கை
வள்ளன்மை - கொடைத் தன்மை
வன்கண் - அஞ்சாமை
வன்பாட்டது - வலியதிறன்
வாரி - வருவாய்
வால் - ஒளி
வித்து - காரணம்
விதிர்ப்ப - பெய்ய
வியம் - ஏவல், வியப்பு
விலைப்பாலில் - விலைப்பகுதியில்
விளி - சாக்காடு
வீறு - சிறப்பு
வெகுண்டார் - கோபமுற்றார்
வெட்கென்றார் - வெள்ளிய அறிவினையுடையார், அறிவில்லார்
வெதிர் - மூங்கில்
வேட்கை - காதல்
வேள்வி - யாகம்
வேளாண்மை - ஈகை

# விளக்கக் குறிப்பு

2. சோவின் அருமை: 'சோ' என்பது வாணாசுரன் நகரமாகிய சோணிதபுரம். இந்நகரம் சிவபிரான் முதலியோரால் காவல் செய்யப்பட்டது; இதுவே அதன் அருமை- இச்சரித்திரம் பாகவதத்தில் பத்தாங்கந்தத்தில் அநிருத்தன் மணம்புரி அத்யாயத்தில் (35) கூறப்பட்டுள்ளது. புறப்பொருள் வெண்பாமாலையில் (101, 228) கந்தழியை விளக்குமிடத்துச் 'சோ' என்னும் அரண் அழிந்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. இந்நகரை 'வாணன் பேரூர்' எனக்குறித்து இதன் வீதியில் 'நீணில மளந்தோன் குடக்கூத்து ஆடினன்' என்று சிலப்பதிகாரம் உணர்த்தும் (6. கடலாடு 55—55). ஆய்ச்சியர் குரவையுள், 'சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த சேவகன்' என வருவதும் இச்சரித்திரத்தையே உணர்த்துகிறது. இந்நகரத்தைக் கடலுக்கு அப்பாலுள்ளதென்பர். 'பேராளன் ஆயிரந்தோள் வாணன்மாளப், பொருகடலே அரண்கடந்து புக்கு' (திருநெடுந் - 20) என்ற நாலாயிரப் பிரபந்தச் செய்யுள் இச்செய்தியை அறிவிக்கிறது,

குன்று: கோவர்த்தனகிரி. இவ்வரலாற்றைப் பாகவதம் விரிவாகக் கூறுகிறது.

4. அசுணம்: இதனைப் பறவை என்பர் பிங்கல நிகண்டு ஆசிரியர் முதலியோர். கலித்தொகை (நெய்தற்கலி 26), அகநானூறு (88) முதலிய நூல்கள் இதனை மிருகமெனக் கொள்ளும். தொல்காப்பியத்தில் மெய்ப்பாட்டியல் உரையில், அச்சப் பொருளாவன:

'வள்ளெயிற் றரிமா வாள்வரி வேங்கை
முள்ளெயிற் றரவே முழுங்கழற் செந்தீ
ஈற்று மதமா ஏக பாதம்
கூற்றம் கோண்மா குன்றுறை அசுணம்'

என்று வந்துள்ளது. இதனால் இவ்விலங்கு தீங்கிழைப்பதென்றும், அஞ்சத்தக்கதென்றும் மலையில் உறைவதென்றும் கருதப்பட்டுள்ளமை தெரியலாம். புகைநிற முடையதென்றுங் கூறுவர் (கம்ப. நாடவிட். 14). இதனை இசையறிய வல்லதெனக் கூறுதல் கவி மரபு. வடமொழியிலும் (சுக்கிரநீதி 1 : 103) இம்மரபு காணப்படுகிறது.

9. களவு காணுதல் : களவு செய்தல்

15. வீக்குதல் : நரம்பினைக் கட்டுதல்

21. கற்றநூல் கலங்குதலாவது நூலின் பொருள் உணரப்படாமல் இருத்தல்.

26. நசையின் நன்மை நட்டார் மாட்டுச் சிறக்கும் என்பது நண்பினரிடத்து ஓர் விருப்பத்தை உணர்த்தினால் அது பயன்பட்டுச் சிறக்கும். ஏனையோரிடத்துப் பயன்படாதாம்.

36. வியக்களி என்பதற்கு வியக்குங்களி என்ற பொருள் சொற்பொருள் நோக்குமிடத்துப் பொருந்துவதாகத் தோன்றவில்லை.

37. குருகிலை : 'குருகிலை ஒண்டொடி நல்லார் முறுவற்கவின் கொள' (21) எனவும், 'அருவி யதிரக் குருகிலை பூப்ப' (30) எனவும் திணைமொழி யைம்பதில் வந்துள்ளமை நோக்கத்தக்கது.

மேகமுழக்கத்தால் இம்மரம் தளிர்க்கும் என்றல் கவிமரபு. இங்ஙனமே இம்முழக்கத்தால் மூங்கில் முளைவிடும் எனக் காவ்ய மீமாம்ஸையும் (18-ம் அத். வர்ஷாகால வர்ணனை), கதம்பம் அரும்பு விடும் என உத்தரராம சரிதமும் (VI, 2) உணர்த்துகின்றன. இக்கவிமரபுகள் வடமொழிக் காவியங்களில் மிகுதியாய்க் காணப்படுகின்றன.

40. உண்டென்ற நூலை நெறியாற் கேட்டதனையே செய்வார் அறிவினையாள்வார் என்றது நூல்கள் விதித்தவற்றையே செய்வர் அறிவுடையார் என்பதாம்.

46. ஊடலுணர்தல் : ஊடலினின்றும் தெளிதல் அதாவது தலைவனும் தலைவியும் மனம் தெளிந்து ஊடலைக் கைவிடுதல்.

49. தத்தம் நனையினுள் நந்தும் நறு: மதுவகைகள் அவற்றிலே இடப்படும் பூவிசேடத்தினுல் மணம் சிறந்து நல்லவாகும். மதுவிற்கு மணம் ஸ்வபாவமாகவும் (இயற்கை) ஸம்ஸ்காரமாகவும் (செயற்கை) உண்டாம் என்றும் செயற்கை மணத்திற்கு மாந்தளிர், உற்பலப்பூ முதலியவற்றை மதுவில் இடுவது உண்டென்றும் சிசுபால சரிதம் 10-ம் ஸர்க்கத்தில் (சுலோ. 1, 3, 8) கூறப்பட்டுள்ளது.

50. தொடர்ச்சி மிக்கார்க்கு அரிய செறுதல்: ஒருவனோடு நட்பு முதலியவற்ருல் நெருங்கியவர்களுக்கு அவனைக் கோபித்தல் அரியதாம்.

51. சீலங்களை: ஒழுக்கங்களை

வரைகொள்ளாத சேனை: மறம், மானம், மாண்ட வழிச்செலவு, அரசன்மாட்டு அன்புடைமை, தேற்றம் முதலிய இயல்புகள் நோக்கி வரையறை செய்து கொள்ளாத சேனை. (குறள்-766)

54. ஏலாதான் பார்ப்பான், ஒரு தொடையான் வெல்வது கோழி: பகைகாரணமின்றியே சீறி வெல்லுங் கோழி போலன்றி ஒருவர் மாட்டும் பகைமை கொள்ளாதவன் பார்ப்பான் என்று உரை கூறுவதாகத் தோன்றுகிறது. மூலத்தில் தனித் தனிக் கருத்துக்களாகவே கொடுக்கப்பட்டுள்ளன. செய்யுட் பொருள் ஐந்தாகி விடுதல் கருதி இவ்வாறு பொருள் கூறினர் போலும். பகைமைக்குரிய காரணமின்றிச் சீறுதல் கோழிக்கு இயல்பென்பது

கறுப்புறு மனமுங் கண்ணிற் சிவப்புறு சூட்டுங் காட்டி
உறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் மதுகைய வீரவாழ்க்கை
மறுப்பட ஆவிபேணு வாரணம் பொருத்து வாரும்

(கம்ப-பால-நகரப். 16)

என்ற செய்யுளால் உணரலாம்.

59. உரையிலுள்ள எந்த நாள்களும் என்பதற்கு எந்த நாளினும் என்று பொருள் கொள்க.

64. கண்ணுள்ளுங் காண்புழிக் காதற்றும்: இதன் பொருள் கருகலாயுள்ளது. இமை, மிண்டை முதலிய அனைத்துங் கூடிக் கண் எனப் பெயர்பெற்ற போதினும் அவற்றுள்ளும் காணுந் தொழிலைச் செய்கின்ற உறுப்பே ஒருவனால் விரும்பத் தருவதாயுள்ளது என்று ஒருவாறு பொருள் கொள்ளுதல் அமையும்.

85. கூத்தொருவன் பாடலாற் பாடுபெறும் என்ற பாடமே "விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்' என்ற திரிகடுகச் செய்யுட் பகுதியால் பொருந்துமெனத் தோன்றுகிறது.



# பாட பேதங்கள்

## 1. செய்யுளில் பாட பேதங்கள்

| செய்யுள் எண் | சீரெண் | பாட பேதம் |
|---|---|---|
| 42 | 13 | கண்டாஅங் |
| 67 | 7 | காலேதம் |
| 89 | 8 | பேணின |

## 2. உரையில் பாட பேதங்கள்

| செய்யுள் எண் | உரை வரி எண் | அச்சுப் பாடம் | பாட பேதம் |
|---|---|---|---|
| 10 | 3 | எய்தாமைக் | எய்தாமைக்குக் |
| 11 | 2 | பூவை | பூவின் பன்மையை' |
| 13 | 4 | செய்யுஞ் செய்கையைக் | செய்யும் வினையைக் |
| 14 | 2 | கொல்களிறு | கொல்லேறு |
| 17 | 1 | தனக்குப் பொல்லாப்பு வேண்டின் | தனக்கு இன்னாமை வேண்டினானாயின் |
| 18 | 2 | செல்லும் | செல்லுவன் |
| 28 | 4 | அவ்வுலகின் | அவ்வுலகின்கண் |
| 32 | 2 | முறுவல் | உவகை |
| 40 | 1 | கண்ணால் கண்டதனையே | கண்ணாரக் கண்டதே |
| 47 | 4 | மனத்தின் | அம்மனத்தின் |
| 50 | 3-4 | இரந்துவந்தார்க்குத்தாம் | இரந்தவர்க்கு யாதானும் |
| 75 | 1 | தேவரே | தேவரைப் |
| 86 | 2 | எஞ்ஞான்றும் அறத்தினையே முயன்று ஒழுகுதல் மறையவர்க்குக் கருத்தாவது | மறையவர்க்கு எஞ்ஞான்றும் அறத்தை முயன்றொழுகல், அவர்க்குத் தொழினலமாவது |
| 88 | 2 | வலிசெய்க | தருக்குதலைச்செய்க |
| 89 | 1 | கெடக்கடவார் மாட்டு முயற்சியின்மை | மடியக்கடவார் மாட்டு முயற்றின்மை |
| | 2 | விரும்பப்பட்ட | பேணினால் |
| 92 | 2 | கண்ணோட்டம் | க்கு இனிமை |
| 96 | 3 | வைத்துச் சாதகப் | ஓங்கற் |
| 100 | 1 | மருவி அமைந்தாரை | விரும்பி அமைந்தார் தம்மை |

# பிழை திருத்தம்

| செய்யுள் எண் | உரை வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 101 | 4 | வன் | ஒருவன் |

